Regd. No. M. 4392

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk, Madras

# குளிர்காலம்

உழவன் களைப்பில் தன் கைகளை சூடுசெய்து கொள்ளுகிறான். இலைகள் உதிர்ந்த மரக்கிளைகள் மூலமாக குளிர் காற்று வீசுகிறது. வளைந்து செல்லும் மணல் சந்தையின்மீது மாட்டு வண்டி மெதுவாகச் செல்கிறது. வண்டிக்காரன் பல்லிட்டும் குளிருக்குஞ் போர்வையை இழுத்துப் போர்த்திக்கொள்ளுகிறான். சந்தையிலும், குடிசைகளிலும், வயல்களிலும், மரத்தடியிலும் உள்ள ஒவ்வொருவரும் டீ யின் கதகதப்பையும் சூட்டையும் எதிர்நோக்கி நிற்கிறார்கள். டீ யைப்போல மலிவாக, சுலபமாக எங்கும் கிடைக்கக்கூடியதும் திருப்தியளிக்கக்கூடியதுமான பானம் வேறொன்றுமே இல்லை

சென்ட்ரல் டீ போர்டின் வெளியீடு



எல்லோரும் டீ அருந்தும் நேரமே.
டீ டைம்

# உங்கள் (தேக) ஆரோக்கியத்தை
# பருகுங்கள்




போர்ன்-வீடா பாலை விடச் சிறந்தது, அதில் சக்தி தரும் விடமின்களும், கால்ஷியமும் அடங்கியுள்ளன. விளையாட்டுக்காரருக்கும் பலஹீனருக்கும் ஒருங்கே இன்றியமையாதது. குழந்தைகள் அதன் சாக்லேட் மணத்தை விரும்புவர். காலையிலும் இரவிலும் சூடாகவோ அல்லது குளிர்ந்த பானமாகவோ, ஒரு கிளாஸ் பாலுடன் இரண்டு தேக்கரண்டியளவு சேர்த்துப் பருகவும்.




—ஆரோக்கிய விருக்ஷம்—




CFY 2 TAM

## காட்பரீஸ்
# போர்ன்-வீடா

கால்ஷியமும், ஏ & டி விடமின்களும் நிறைந்தது

காட்பரி-ப்ரை (இந்தியா) லிமிடெட்

[illegible]



"ரொம்ப நாளா, என் பெண் பட்டுப் பாவாடை வேணும்னு ஓயாமல் கேட்டு அழுதுப் போயிருந்தா. தீபாவளிக்குக் கூட என்னாலே வாங்கித்தர முடியல்லே. கார்த்திகைக்காவது வாங்கிடணும், குழந்தையை ஏமாத்தக் கூடாதுன்னு நினைச்சேன். ஆனா பணம்தான் கிடைக்கல்லே!

"சார்! நான் நல்லவனாத்தான் இருந்தேன். ஆனால் என் ஏழ்மை ஒரு நிமிஷத்திலே என்னைத் திருடனாக்கி விட்டது. சமயத்தை விடாமல் திருடி விட்டேன். ரொம்ப திருடல்லே — ஐம்பது ரூபாய் தான்! 'காஷியர்' அறைக்குள்ளே நான் சகஜமாகப் போவேன், யாரும் என்னைச் சந்தேகிக்க மாட்டார்கள்.

"ஆனா அன்னைக்கி ஒரு குமாஸ்தா மட்டும் நான் பணத்தை எடுத்ததைப் பார்த்துட்டாரு. அவரு 'போலீ'க்குப் போன் செய்து விட்டார். அது எனக்குத் தெரியாது." முனுசாமி ஒரு விநாடி நிறுத்தினான்.

உடனே பிள்ளை மேலே தொடர்ந்தார்:

"நான் கீழே வந்ததும் நிலைமையைக் கண்டு கொண்டேன். 'போலீஸ் சர்க்கிள் இன்ஸ்பெக்டருடன்', இரண்டு போலீஸ் ஜவான்கள் நின்றிருந்தனர். முனுசாமியின் கையில் விலங்கைப் பார்த்ததும் என் மனது இளகிவிட்டது. அவனைத் தப்புவிக்க ஒரு உபாயம் செய்தேன். 'நான்தான் ஐம்பது ரூபாய் கொண்டு வரச் சொன்னேன். தவறாகக் குமாஸ்தா அவனைத் திருடனென்று எண்ணி விட்டார்' என்று பெரிய பொய்யை மெய்யாக்கிச் சொன்னேன். மாடியிலிருந்து மானேஜரும் வந்தார். அவரும் அவனுக்கு அனுகூலமாகப் பேசவே, 'சர்க்கிள்' பேசாமல் திரும்பி விட்டார். ஆனால் குமாஸ்தா முணுமுணுத்தார். 'இப்படித் திருடர்கள் பாங்கில் இருந்தால், ஏன் திவாலாகாது?'

"'பாங்க்' இருக்கும் நிலைக்கு இந்தத் திருட்டுச் சங்கதி ஜனங்களுக்குச் சந்தேகத்தைக் கொடுக்கும் என்று கூறி குமாஸ்தாவைச் சமாதானம் செய்யவேண்டியிருந்தது" என்று கூறி நிறுத்தினார் சுந்தரம் பிள்ளை.

"ஏழ்மையின் கஷ்டத்தாலே திருடிட்டேன். என் நிலை தெரிஞ்ச ஐயா, என்னைக் காப்பாத்தினாரு. மானேஜர் கிட்டே சொல்லி என் சம்பளத்தையும் உயர்த்தினாரு. ஏழைகளோட கஷ்டத்தைத் தெரிஞ்சு வச்சிருந்தும் மனமிரங்கறவங்க, கொஞ்சம் பேருதான்" என்று முனுசாமி துக்கமாகப் பேசி முடித்தான். அவன் கண்களில் ஆழ்ந்த நன்றியின் பிரதிபலிப்புக் காணப்பட்டது.

"இவனைக் காப்பாற்றினதற்கு நன்றி செலுத்த, ஒவ்வொரு கார்த்திகைக்கும் பட்டுப் பாவாடை ஒன்றைக் கொடுத்து விடுகிறான். வேண்டாமென்றால்கூடக் கேட்பதில்லை" என்று சுந்தரம் பிள்ளை சிரித்துக் கொண்டே கூறினார்.

# பரிசுப் பாவாடை!



நிமலன்

இந்தக் கார்த்திகைக்கு நான் சென்னையில் தங்க நேர்ந்தது. அப்போது என் நண்பர் சுந்தரத்தைப் பார்க்கப் போயிருந்தேன்.

சுந்தரம் பிள்ளை, 'சாரதி - பாங்கின்' 'காஷியராக' இருந்தவர். என்னிடம் அவருக்கு அளவு கடந்த அன்பு. அவர் வீட்டுக்குச் சென்று விசாரித்த போது அவர் வெளியே சென்றிருப்பதாகத் தகவல் கிடைத்தது.

கார்த்திகை நாள்; மாலை மங்கும் நேரம். ஒவ்வொரு வீட்டிலும் அகல் விளக்குகளை ஏற்ற ஆரம்பித்தனர். தெருவிற்குப் பொற்காசு மாலையை அணிவித்தது போல், இரு மருங்கிலும் பொட்டுப் பொட்டாக அகல் விளக்குகளின் பொன்ஜோதி பார்க்க மனோரம்மியமா யிருந்தது.

எத்தனை நாழிகை அக்காட்சியில் மயங்கி நின்றிருந்தேனோ எனக்கே தெரியாது. "என்ன அவ்வளவு யோசனை?" என்று கேட்டுக் கொண்டே வந்த சுந்தரம் பிள்ளையின் குரலைக் கேட்டுத் திரும்பினேன்.

"கார்த்திகைத் திருநாளில் தெருவைப் பார்க்க எவ்வளவு அழகாக இருக்கிறது! என் மற்ற நாட்களில் எல்லாம் அகல் விளக்குகளை ஏற்றி வைக்கக் கூடாது என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன்" என்றேன். இதைக் கேட்ட சுந்தரம்பிள்ளை என்னைப் பார்த்துச் சிரிக்க ஆரம்பித்தார்.

"சரிதான், எண்ணெய் விற்கிற விலைக்குத் தினம் தினம் அகல் விளக்கு வேணுமா, உனக்கு? அதோ பார்! இந்த விளக்குகளை விட அழகாகத் தினம் சாயந்திரம், இறைவன் எண்ணற்ற அகல் விளக்குகளை ஏற்றி வைக்கிறான்" என்று ஆகாயத்தைச் சுட்டிக் காட்டினார்.

அப்போது அவரைப் பார்க்க டவாலி யணிந்த சேவகனைப் போன்ற வயதான ஒரு ஆள் வந்தான்.

"யாரு முனுசாமியா, வா!" என்று அழைத்தார் பிள்ளை. வந்தவன் ஒரு காகிதப் பையை அவரிடம் கொடுத்து விட்டு வணங்கினான்.

"பாவாடை கொண்டு வந்து விட்டாயா? வேண்டாமென்றால் பேசாமல் இரேன். எத்தனை தடவை அன்பளிப்பு" என்றார் சுந்தரம் பிள்ளை.

"நல்ல பட்டு, சார்! எந்தக் கடையிலிருந்து வாங்கி வரச் சொன்னீர்கள்?" என்று நான் கேட்டதும், பிள்ளையும் முனுசாமியும் வியப்புடன் என்னைப் பார்த்தனர்.

பிள்ளை சிரித்துக் கொண்டே சொன்னார். "நான் காஷியராக இருந்த போது ஒரு சம்பவம் நடந்தது. அப்போதிருந்து ஒவ்வொரு கார்த்திகைக்கும் ஒரு பட்டுப் பாவாடையை எனக்கு இவன் அன்பளிப்பாகக் கொடுத்து வருகிறான்."

"நீங்கள் சொல்வது புரியவில்லையே! எதற்கு அன்பளிப்பு? அதுவும் கார்த்திகையன்று!" என்று பிரமிப்புடன் கேட்டேன்.

"சரி சொல்கிறேன். முனுசாமி, நீ நடுவில் பேசக் கூடாது" என்று அவனைக் கட்டளையிட்டு விட்டுப் பிள்ளை ஆரம்பித்தார்.

"நான் 'காஷியர்' வேலை பார்த்து வந்த 'சாரதி பாங்க்' ஒரு சமயம் திவாலாகி விடும் நிலையை அடைந்து விட்டது. முனுசாமி அப்போது அந்த 'பாங்கியின்' சேவகனாக இருந்தான். என்னுடைய அறைக்கு இவன்தான் காவல். அங்கிருந்த 'பியூன்'களுக்குள் மிகவும் நல்லவன்.

"'பாங்க்' திவாலாகி விடும் என்று ஜனங்களுக்கு எப்படியோ தெரிந்து விட்டது. எங்கும் ஒரே பரபரப்பு. ஒரு நாள் பகல் 'மானேஜர்' என்னை அழைத்தார். அவருடைய அறை மாடியில் இருந்தது. நான் மேலே அரை மணி நேரம் அவருடன் பேசிக் கொண்டிருந்தேன். அதற்குள் கீழே ஒரு..." என்று சொல்லிக் கொண்டிருந்தார்.

"சார், இனிமே நான் சொல்லுகிறேன்" என்று முனுசாமி இடையில் பேசினான். பிள்ளை பேசாமலிருந்து விட்டார். முனுசாமி தொடர்ந்தான்:

"'காஷியர்' ஐயா மாடிக்குப் போனது எனக்கு ஒரு சௌகரியத்தைக் கொடுத்தது. பணப்பெட்டியை மூடாமல் போய் விட்டாரு. பணம்னு பிணங்கூட வாயைத் திறக்குமே! அரை வயித்துக் கஞ்சி சாப்பிட, எங்களுக்கு 'பாங்க்' சம்பளம் போதவில்லே. பட்டணத்திலே காலம் தள்ளுவது எவ்வளவு தொல்லை தெரியுங்களா?

ரிடையும் கல்யாணப் பேச்சு ஆரம்பமா யிற்று. ஜாதகம் பார்க்கும் கட்டமும் வந்தது. அப்போதுதான் எங்கள் பிற்கால வாழ்க்கையைப் பற்றி நாங்கள் கட்டிய மனக்கோட்டைகள் தகர்ந்தெறியப் பட்டன. ஜோசியர்கள் எனக்குப் பலத்த செவ்வாய் தோஷம் இருப்பதால் விவாக மாகிய எட்டாவது மாதமே என் கணவர் இறந்துவிடுவாரென்றும், என்னைப் போலவே செவ்வாய் தோஷ முள்ளவராகப் பார்த்து எனக்குக் கல்யாணம் செய்வதின் மூலம் தான் அதை நிவர்த்திக்க முடியும் என்றும் திட்டமாகச் சொல்லி விட்டார். இதன் பலனாக சிறு வயதிலிருந்தே புருஷன்—மனைவி உறவில் வளர்ந்து வந்த நாங்கள் பிரிக்கப்பட்டதுடன், எங்களிரு குடும்பத்தா ரிடையும் மனஸ்தாபம் ஏற்பட்டு, பேச்சு வார்த்தையும் நின்று விட்டது. கடைசியில் என் அத்தானின் இஷ்டத்திற்கு மாறாகவே மற்றொருத்தியை அவருக்கு விவாகம் செய்து வைத்து விட்டார்கள்.

பிறகு என் தந்தை எனக்கு வரன் தேடும் வேட்டையில் இறங்கினர். செவ்வாய்தோஷ முள்ள என்னை விவாகம் செய்து கொண்டு தங்கள் உயிருக்கு உலை வைத்துக் கொள்ள எவரும் விரும்பவில்லை. என்னைப் போலவே செவ்வாய் தோஷம் உள்ள வரனாக அவர் எவ்வளவு தேடியும் பலனில்லை. இரண்டு வருஷங்களுக்குப் பிறகு செவ்வாய் தோஷ மில்லாத ஒருவரே வந்து சேர்ந்தார். அவ ருக்கு என்னைப் பிடித்துப் போய்விட்டதால் எனக்குச் செவ்வாய் தோஷ மிருப்பதைத் தெரிந்து கூடத் தம் வாழ்க்கைத் துணைவி யாக்கிக்கொள்ளத் தைரியமாக முன் வந்தார்.

எங்களுக்குக் கல்யாணமாகி ஐந்து வரு ஷங்களாகிறது. நான் இப்போது இரண்டு குழந்தைகளுக்குத் தாய். எங்கள் இல்லற வாழ்க்கை இன்பகரமாகவே ஓடிக் கொண் டிருக்கிறது. செவ்வாய்க் கிரகம் எங்களை ஒன்றும் செய்துவிடவில்லை!

நாகப்பட்டினம்,
10—1—50

பாக்கியம்



ஹோட்டலில் டிபன் சாப்பிட வந்தவர்:—மசால் தோசை ஆர்டர் பண்ணி எவ்வளவு நாழிகையாகி விட்டது! இன்னும் நீ கொண்டுவர வில்லையே!

சர்வர்:—நீங்கள் இப்படி அவசரப் படுத்தாதீர்கள்! தோசை வேக வேண்டாமா? இப்பொழுதுதான் ஒரு பக்கம் வெந்து கொண்டிருக் கிறது!

சாப்பிட வந்தவர்:—அப்படியானால் முதலில் வெந்த பக்கத்தையாகிலும் போய்ச் சீக்கிரம் கொண்டு வா!

---

○●○

## பகை உண்டுபண்ணி விடாதீர்!

1. அடக்க முடையநல் தமிழர்களைச்—சற்றும்
அறிவிலர் என்றெண்ணி ஆத்திரமாய்
வடக்கில் ஆந்திரர் வந்ததுபோல்,—நீரும்
வம்புக்கு வாராதீர் கேரளரே!

2. சென்னை எம்மன்னை சிரசாகும்—தென்
கன்னி குமரியவள் கழலணியாம்
அன்னைக்குத் தன்மக்க ளாற்றும்பணி-அவள்
அவதி யகற்றிடல் என்றறிவோம்.

3. அந்நிய ரெமையாண்ட காலத்திலே—அவர்
ஆட்சி மேலோங்கிடும் நோக்கத்திலே
கன்னியா குமரி எல்லைதன்னை—கப்பக்
காசுக்கு விற்ற கதையறிவோம்.

4. சேயுந்தன் தாய்மடி சேர்ந்திருந்து—
அன்பாய்ச்
சிந்து மகிழ்ந்திடத் துடித்திடல்போல்
நேயமாய்த் தாயகம் நாடிநிற்கும்—நாஞ்சில்
நாட்டாரை வாட்டுதல் நியாயந்தானோ?

5. மலையாள மந்திர தந்திரத்தில்—சற்றும்
மயங்கிடார் தமிழக மக்களய்யா!
மலைபோல நின்றெதிர்க்கும் மாண்புடைய
மரபினில் வந்தவர் தமிழரய்யா! [வீரர்

6. ஐக்கிய கேரள ஆசையிலே—நம்
ஐக்கிய மழிவது மறந்தீரோ?
பைத்திய காரர்போல் பலபேற்றி—நம்முள்
பங்காளிப் பகையுண்டு பண்ணிடாதீர்!

திருப்பூர்
8-1-50

டி. சாமுவேல்ராஜ்

---

★ வட்டமேஜைப் பரிசுத் தொகை ரூ. 12-8-0 விதம் "தேவாப் பங்கள்" என்ற கடிதம் எழுதிய தஞ்சாவூர் துரையப்ப பாகவதருக்கும், "செவ்வாய் என்ன செய்யும்?" என்ற கடிதம் எழுதிய நாகப்பட்டினம் பாக்கியத்திற்கும், ரூ. 12-8-0 விதம் பிரித்து வழங்கப்பட்டது.

பிழைக்கிறது. சர்க்கார் உத்தரவுப்படி கட்டாயமாக நாங்கள் எங்கள் கரும்புகளைப் புகளூர் 'மில்'லுக்குக் கொடுக்க நேரிட்டால், தண்ணீர்த் தட்டுதலால் மகசூல் காய்ந்து கெட்டுப் போவதுடன், இந்தக் குடிசைத் தொழில் அழிந்து, அதனால் பிழைத்து வரும் குடும்பங்கள் சாப்பாட்டுக்குக் கஷ்டப்பட்டு அவதிப்பட நேரிடும்.

கொடுமுடி
9-1-50 வேங்கட சுப்பிரமணியன்

○●○

## படிக்காதவர் வரி!

இந்தியாவில் படித்தவர்கள் நூற்றுக்குப் பதின்மூன்று பேர்தான் என்று சொல்லுகிறார்கள். அப்படியானால் மற்ற எண்பத்தேழு பேர்களின் கதி என்ன? அவர்கள் எந்தக் காலத்தில் படிப்பது?

இத்தகைய நிலையில் அரசாங்கத்தார் 2000 பாடசாலைகளை எடுத்துவிடப் போகிறார்களாம். எப்படி யிருக்கிறது கல்விப் பிரசாரம்! பல நூற்றாண்டுகளாகக் கிராம ஜனங்களைப் பிடித்துவரும் கல்லாமைப் பிசாசை ஒழிக்க ஒரே ஒரு வழிதானிருக்கிறது. அதுதான் கல்லாமை வரி—படிக்காதவர்களுக்கு வரி. அதாவது "ஏழையாயினும் சரி, பணக்காரராயினும் சரி, தன் பிள்ளைகளைப் படிக்க வைக்காவிட்டால், நிலவரியை எப்படித் தன் கடமைப்படி செலுத்துகிறார்களோ அதுபோல மாதா மாதம் அவரவர்களின் நிலைமையை அநுசரித்துப் படிக்காதவர்களின் வரி கட்ட வேண்டும்" என்று அரசாங்கத்தார் உத்தரவு போடுவார்களாயின் படித்தவர்களின் எண்ணிக்கை எவ்வளவு வேகமாக வளர்ந்து விடுகிறது பாருங்கள்.

அரசாங்கத்தாருக்கு இவ் வரியின் மூலம் வருமானம் வருகிறது. அந்த வருமானத்தைக் கொண்டே கல்வி இலாகாவைச் சீர்திருத்தம் செய்யலாம்.

நான் ஒரு பள்ளிக்கூட ஆசிரியர். ஒரு சமயம் பெற்றோர் சங்கம் நடத்தினேன். சங்கத்திற்குப் பஞ்சாயத்து போர்டு உதவித் தலைவரைக் (வைஸ் பிரெஸிடெண்ட்) கூப்பிட்டேன். அதற்கு அவர் "உங்களுக்கு வேறு பிழைப்பில்லையா? ஏனய்யா தொந்திரவு செய்கிறீர்?" என்று சொன்னார். வீட்டில் வெறுமனே தூங்கிக் கொண்டிருப்பவர் பாடசாலைச் சங்கத்திற்கு வரக் கூடாதா? இன்னும் கொஞ்சம் வற்புறுத்திக் கூப்பிட்டால் உதைதான் கிடைக்கும். மற்றொரு சமயம் ஒரு பஞ்சாயத்து மெம்பரைக் கண்டு "ஏன் உம் பெண்ணைப் பாடசாலைக்கு அனுப்பவில்லை?" என்று கேட்டேன். அதற்கு "பெண் வந்தால் படிப்புக் கற்றுக் கொடு. இல்லாவிட்டால் தொந்திரவு செய்யாதே!" என்று சொன்னார். மேற்கண்ட நபர்கள் சிறிது படித்தவர்கள்; இவர்களே இப்படி என்றால் படிக்காத மற்றவர்களைப் பற்றிக் கூறவா வேண்டும்? சர்க்கார் மனம் வைத்தால் கல்லாமை ஒழிந்து விடும் என்று நம்புகிறேன். எது எப்படியாயினும் கல்வியைப் பற்றி இவ்வளவு நேரம் உட்கார்ந்து எழுதியதற்கு என் மனம் மிகவும் திருப்தியடைகிறது.

விளாக்குப்பம்
8—1—50 கே. ராமசாமி



○●○

## ★ 'செவ்வாய்' என்ன செய்யும்?

சகுனம்—ஜாதகம் பார்ப்பதில் நம் பொன்னான காலம் வீணாவதுடன் சிற்சில சமயங்களில் நம் வாழ்க்கையையும் பாதிக்கிறது என்னும் உண்மையை என் போல் அவரவர் சொந்த வாழ்வில் அனுபவித்தவர்கள் நன்றாக உணர முடியும்.

சிறு வயதிலிருந்தே என் மாமா பிள்ளையும் நானும் ஒன்றாக வளர்ந்தவர்கள். அப்போதே எங்கள் பெற்றோர்கள் எங்களுக்குக் கலியாணம் செய்து வைப்பது என்று உத்தேசித்தார்கள். நாங்கள் கல்யாண வயதை அடைந்ததும் இரு குடும்பத்தா

குத் தற்காலத்தில் வழங்கும் பல ராகங்களின் பெயர் சொல்லப்படுவதையும், அது போலவே பல பண்களுக்குத் தற்காலத்தில் வழங்கும் ஒரே ராகம் சொல்லப்படுவதையும் காண்கிறோம். கீழே குறிக்கப்பட்டிருக்கும் ஏழு பண்களுக்கு மட்டும் வெவ்வேறான ராகங்கள் குறிக்கப்பட்டிருக்கின்றன :—

(1) பண் பழம்பஞ்சுரம் — பூர்வி கல்யாணி

(2) பண் திருவிராகம்—நீலாம்பரி

(3) பண் மேகராகக் குறிஞ்சி—எது குல காம்போதி

(4) பண் கௌசிகம்—சாவேரி

(5) பண் புறநீர்மை—கல்யாணி

(6) பண் கொல்லி கௌவாணம்—சுத்த சாவேரி

(7) பண் அந்தாளிக் குறிஞ்சி—பைரவி

அந்த அட்டவணையில் "பண் யாழ்மூரி" "பண் செந்துருத்தி" ஆகிய பண்கள் காணப்படவில்லை. என்றாலும் "திராவிட வேதத்திரட்டு" (இரண்டாம் பாகம்) என்ற புத்தகத்தில் மேலே குறிப்பிட்ட இரண்டு பண்களும் இரண்டு தேவாரப் பதிகங்களுக்குக் குறிக்கப்பட்டிருக்கின்றன. அதாவது 134-ம் பக்கத்தில் உள்ள "மாதர் மடப்பிடியு—மடவன்னமு மன்ன" என்ற ஞான சம்பந்தரின் பதிகத்திற்கு 'பண்யாழ் மூரி' ('பண் யாழ் மூறி') என்றும் "மீளா வடிமை யுமக்கே யாளாய்ப் பிறரை வேண்டாதே" என்ற சுந்தரமூர்த்தி நாயனாரின் பதிகத்திற்கு "பண் செந்துருத்தி" என்றும் காணப்படுகிறது.

ஒரே பண்ணுக்கு ராகங்கள் பேதப்படுவதற்கு இடமிருக்கிறது. எப்படியெனில் திருமுறை கண்ட புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறபடி—'கட்டப் படை' எட்டுக் கட்டளை, 'தக்க ராகம்' ஏழு கட்டளை, 'சதாரி' ஒன்பது கட்டளை, 'வியாழக் குறிஞ்சி' ஆறு கட்டளை, 'தக்கேசி' ஆறு கட்டளை என்று இப்படியாக எல்லாப் பண்களுக்கும் கட்டளை பிரித்துச் சொல்லப்பட்டிருப்பதால் இந்த முறைப்படி ராகங்கள் பேதப்பட்டுக் காணுவதற்கு இடமுண்டு. அதோடு பிற்காலத்தவர் அழகாயிருக்கிறதென்று பூர்வப் பண்களை மாற்றி நூதனமான மெட்டுக்களை யமைத்து விடவு




தாலும் பேதப்பட்டிருக்கலாம். சமீபத்தில் தேவாரப் பண்களைப் பற்றித் தமிழிசைச் சங்கத்தாரால் நடத்தப் பட்ட ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்த அறிஞர்களுக்கு சுமார் எழுபத்தைந்து வருஷங்களுக்கு முன்னிருந்த வித்வான்களால் நிர்ணயிக்கப்பட்ட விவரங்கள் உதவியா யிருக்கலாம் என்றெண்ணி இதை எழுதினேன்.

தஞ்சாவூர்
2-1-50 — துரையப்ப பாகவதர்.

○●○

## 'வெல்லம் காய்ச்சாதே!'

எங்கள் பிர்க்காவிலுள்ள கரும்பு மகசூலை, எப்பொழுதும்போல் வெட்டி, சாறு பிழிந்து, காய்ச்சி, வெல்லம் செய்யக் கூடாதென்றும், எங்கள் பிர்க்கா புகளூர் சர்க்கரைக் கம்பெனிக்கு உட்பட்ட பிரதேசம் என்றும், டிசம்பர் 22-ந் தேதி வாக்கில் தண்டோரா மூலம் தெரிவிக்கப்பட்டது.

சர்க்கார் உத்தரவுப்படி நாங்கள் கரும்புகளைப் புகளூர் மில்லுக்குக் கொடுப்பதாக இருந்தால், மில் அதிகாரிகள் 11 மாதம் விளைச்சல் உள்ள கரும்புகளைத்தான் எடுத்துக் கொள்ள முடியும் என்று சொல்லுகிறார்கள். ஆனால் எங்களது எட்டு மாதத்திய கரும்பு; அவர்களுக்குப் பயன்படாது. ஆனால் அதை அடித்துக் காய்ச்சினால் சுத்தமான நாட்டு வெல்லம், சர்க்கரை எங்களுக்குக் கிடைக்கும்.

தவிர 'மில்' டெலிவரிக்கு எங்களுக்கு நொய்யல் நதியைக் கடந்து செல்வதில், பாலம் வசதி இல்லாததால், லாரிக்கோ, வண்டிக்கோ பெரிய கஷ்டம் ஏற்படுவதோடல்லாமல், டன் ஒன்றுக்கு ரூ. 11 செலவாகிறது. 'மில்'காரர்கள் கொடுப்பது டன் ஒன்றுக்கு ரூ. 46–12–0. எங்கள் கைக்குக் கிடைப்பது செலவு போக ரூ. 35–12–0.

ஒரு ஏக்கருக்கு விளைச்சல் சுமார் 25 டன்னிலிருந்து 30 டன் தான். ஒரு ஏக்கருக்குச் செலவு ரூ. 500 க்குக் குறைவதில்லை. அதோடு குத்தகை ரூ. 700 க்குக் குறைவு கிடையாது. இதனால் விவசாயிகளுக்கு 'மில்'லுக்குக் கொடுப்பதினால் நஷ்டம்.

கொடுமுடி வெல்லம் மாகாணப் பிரசித்தமானது. வெல்லம் காய்ச்சும் குடிசைத் தொழிலினால் சுமார் 500 வேலையாட்களுடைய குடும்பம்




## ★ தேவாரப் பண்கள்

இந்திய சங்கீதத்திற்கு அடிப்படையாய் விளங்கியவை தமிழ் நாட்டுப் பண்கள் தாம். ஆதிகாலத்தில் தமிழ் நாட்டில் வழங்கிவந்த ராகங்களின் தொகை பன்னீராயிரம் என்று சிலப்பதிகாரம் அரங்கேற்றுக் காதையில் உள்ள அடியில்கண்ட சூத்திரத்தால் அறிகிறோம்.

**உயிருயிர் மெய்யளவுரைத்த வெம்பாவினு**
**மூடறம்பியமிசை யேழுடன் பகுத்து**
**மூவேழ் பேய்தந்**
**தொண்டு மீண்ட பன்னீராயிரம்**
**கொண்டனர்பெற்றக் கோவைவல்லோர் கடனே.**

பன்னீராயிரம் இசைகள் என்பதால் நூற்றுமூன்று பண்கள் தாய் ராகங்களாகவும் மற்றவை ஜன்னிய ராகங்களாகவும் கொள்ளப்பட வேண்டும். இந்தப்பண்களின் பெயர்கள் பிங்கல முனிவரால் எழுதப்பட்ட பிங்கல நிகண்டில் காணப்படுகின்றன. ஆனால் இப்போது வழக்கத்தில் உள்ள தேவாரப் பண்கள் சுமார் இருபத்தாறு தான் என்று சொல்லலாம்.

திராவிட வேதமாய் வழங்கும் இந்தத் தேவாரப் பதிகங்கள் ஏழாவது நூற்றாண்டிலிருந்த அப்பர், சம்பந்தராலும், ஒன்பதாம் நூற்றாண்டிலிருந்த சுந்தரமூர்த்தி நாயனாராலும் பாடப்பட்டவை என்பது யாவருமறிந்ததே. இப்போது அவை பாடப்படும் முறையிலிருந்து அந்தப் பண்கள் எந்தெந்த ராகங்களுக்கு ஒத்தவைகளாயிருக்கின்றன என்பதை நிச்சயமாய்த் தீர்மானிப்பது எளிதல்ல. என்றாலும் சுமார் எழுபத்தைந்து வருஷங்களுக்கு முன்னதாகவே சில வித்வான்கள் இந்த ஆராய்ச்சியில் ஈடுபட்டுத் தீர்மானித்திருக்கும் விவரங்களை இங்கே தெரிவிக்க விரும்புகிறேன்.

சங்கீத சாஸ்திரத்தில் மிகுந்த பாண்டித்திய முடையவரென்றும், சிறந்த பக்தசீலரென்றும், யாவராலும் கொண்டாடப்படும் மகா வைத்தியநாதய்யரவர்களையும் அன்னாரின் மூத்த சகோதரரும் தமிழில் பெரிய புராணக் கீர்த்தனைகள் செய்தவருமாகிய ஸ்ரீ ராமஸ்வாமி அய்யரவர்களையும் பற்றி நம்மில் அநேகர் கேள்விப் பட்டிருப்பார்கள். இவர்கள் திருநெல்வேலி கல்லிடைக் குறிச்சியில் மடாதிபதியாயிருந்த ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் அவர்களிடத்தில் ஒருசமயம் போயிருந்தார்கள். அப்போது தேசிகர் அவர்கள் மகா வைத்தியநாதய்யரவர்கள் பேரில் மிகப் பிரீதி கொண்டு அநேக நாள் அங்கேயே தங்கியிருக்கும்படி செய்தார். தமக்கு அதிகப் பிரியமாயிருந்த தேவார—திருவாசகங்களைத் திருநெல்வேலியிலுள்ள நெல்லையப்பர் ஆலயத்தில் தேவார, திருவாசகம் சொல்லும் ஸ்ரீ சாலிவாடீஸ்வர ஓதுவார், ஸ்ரீ தாண்டவராயத் தம்பிரான், புராணிகர் ஸ்ரீ ஷண்முகம் பிள்ளை முதலியவர்களுக்குத் தெரிந்த பூர்வப் பண்களில் பாடும்படி செய்து மகா வைத்தியநாதய்யரவர்களை அம்மாதிரி திரும்பப் பாடும்படி கேட்டு ஆனந்தித்தார்கள். அந்தக் காலத்தில், பூர்வப் பண்களுக்குத் தற்காலத்தில் வழங்கும் இன்னின்ன ராகங்கள், தாளங்கள் ஒத்தவை என்று தீர்மானித்துக் குறித்து வைத்தார்கள். அந்த அட்டவணையில் தேவாரப் பதிகங்கள், அப்பதிகம் பெற்ற ஸ்தலங்கள், பண்களின் பூர்வப் பெயர்கள், அவைகளுக் கேற்ற தற்கால ராகங்கள், பண்களுக்குரிய தாளங்கள், பண்களின் முதல் நினைப்பு (ஆரம்ப வார்த்தைகள்) ஆகிய விவரங்கள் சொல்லப் பட்டிருக்கின்றன. அந்த அட்டவணை, தேவாரப் பண்கள் ஓதும் பக்தர்களுக்கு உதவியாயிருக்கலாம் என்றெண்ணினார் தஞ்சை ராவ் ஸாஹேப் மு. ஆபிரகாம் பண்டிதரவர்கள். ஆகவே, அந்த விவரங்களை மகா வைத்தியநாதய்யரின் மற்றொரு சகோதரரான வையைச்சேரி ஸ்ரீ அப்புசாமி அய்யர் அவர்களிடமிருந்து பெற்றுத் தாம் எழுதிய "கருணாமிர்த சாகரம்" என்ற இசைத் தமிழ் நூலில் 889 முதல் 897 முடிய உள்ள பக்கங்களில் வெளியிட்டு அவைகள் அழிந்து போகாவண்ணம் காப்பாற்றி வைத்திருக்கிறார்.

அந்த அட்டவணையில் 137 தேவாரப் பதிகங்களுக்கு ராகம், தாளம் நிச்சயிக்கப் பட்டிருக்கின்றன. அதில் ஒரே பண்ணுக்

நடக்கும். இந்தக் காலத்தில் சின்னக் கட்சியில் காலக்ஷேபம் செய்த பாகவதர்களில் முக்கியமாகச் சூலமங்கலம் வைத்தியநாத பாகவதர், மாங்குடி சிதம்பர பாகவதர், கோட்டையூர் கிரீச பாகவதர், திருவையாறு அண்ணாசாமி பாகவதர், தஞ்சாவூர் துரையப்ப பாகவதர், சூலமங்கலம் சுப்பிரமணிய பாகவதர், தஞ்சாவூர் லக்ஷ்மி தேவராஜ பாகவதர் ஆகியோரைக் குறிப்பிடலாம். இதுபோல வெகு விமரிசையாய் உற்சவம் நடந்து வருகையில் மாங்குடி சிதம்பர பாகவதருக்கும் மற்ற நிர்வாகிகளுக்கும் அபிப்பிராய பேதம் ஏற்பட்டது.

"உற்சவ நிர்வாக விஷயங்களில் சிதம்பர பாகவதர் அதிகம் ஈடுபட இயலாது என்றாலும், உற்சவத்திற்காக மற்ற நிர்வாகிகளைப்போல் சென்னை முதலான இடங்களில் அவர் ஏன் கதை செய்து கிடைக்கும் வசூலைக் கொண்டு வந்து கொடுக்கக் கூடாது?" என்பது மற்ற நிர்வாகிகளின் எண்ணம். ஆனால் மாங்குடி பாகவதருக்கோ தம்மை ஏன் நேரில் கேட்டுக்கொள்ளக் கூடாது என்ற எண்ணம். நிர்வாக விஷயங்களில் ஒருவரை ஒருவர் கேட்டுக் கொள்வது, பிரார்த்திப்பது என்ற வழக்கம் கூடாது என்பது வைத்தியநாத பாகவதரின் அபிப்பிராயம். இது வர வர முற்றிக் கொண்டே வந்தபடியால் சிதம்பர பாகவதரின் சிரத்தை வரவரக் குறைந்தது. வழக்கம்போல் உற்சவ ஆரம்பத்திற்கு வராமல் மூன்றாம் நாள் அல்லது நான்காம் நாள் வந்து ஐந்தாம் நாள் அதிஷ்டான பூஜையைப் பார்த்துக்கொண்டு அன்றிரவு கதை செய்து விட்டுத் திரும்பி விடுவார்.

சில வருஷங்கள் இதுமாதிரி நடந்தபிறகு நாம் எதிர்பார்க்கும் அளவில் மற்ற நிர்வாகிகள் நம்மை லக்ஷியம் செய்யவில்லை என்றெண்ணிப் பஞ்சமி யன்று புஷ்ய மண்டபத்திற்குச் சமீபத்தில் உள்ள தமது வீட்டில் நண்பர்களுக்கும் அன்பர்களுக்கும் போஜனமளித்து இரவு புஷ்ய மண்டபத்தில் தம் கதையை நடத்தினார். அதைக் கேட்க மகாஜனங்கள் ஏராளமாகக் கூடினர். இம்மாதிரி இரண்டு வருஷங்கள் நடந்தன. இந்தப் பிளவை இனியும் வளரவிடக்கூடாது என்றெண்ணிய சில நிர்வாகிகள் 1937-ம் வருஷம் பல்லடம் சஞ்சீவிராவிடம் கடிதம் வாங்கிக்கொண்டு போய்ச் சிதம்பர பாகவதரை அழைத்து வந்தார்கள். அந்த வருஷம் அவருடைய கதையைப் பதினாயிரத்திற்கு மேற்பட்ட ஜனங்கள் அமைதியுடன் கேட்டு ஆனந்தித்தார்கள். அப்போது ஒலிபெருக்கிகளின் வசதியில்லை என்பது குறிப்பிடத் தக்கது.

மனத் தாங்கலினால் அநேகர் விலகியிருந்திருக்கிறார்கள். ஆனாலும் எல்லோருக்கும் கைங்கரிய வசதியளிக்க வேண்டும் என்பதற்காகவே 'படப் புறப்பாடு' என்ற நிகழ்ச்சியை மிகுந்த குதூகலமாய் வருஷந்தோறும் தாமே கூட இருந்து நடத்துவார்.

வீணை தனம்மாளை ஒரு தெய்வமாகவே எண்ணி நடப்பார் கோவிந்தசாமிப் பிள்ளை. அந்த அம்மாளின் வாசிப்பிலும் ஞானத்திலும் அவருக்கு மட்டற்ற பிரமையுண்டு. அநேக உருப்படிகளையும் பாடம் செய்திருக்கிறார். இவ்வளவு பக்தி விசுவாசத்திற்குப் பாத்திரமாயிருந்த அந்த அம்மாள் ஒரு சமயம் பெரிய கட்சியாரின் உற்சவத்துக்கு வாத்தியத்துடன் கடைசி நாள் வந்து விட்டார். பெண்களின் கச்சேரிகளையே வைப்பதில்லை என்ற கட்டுப்பாடு இருந்ததால் கோவிந்தசாமிப் பிள்ளைக்கு இன்னது செய்வதெனத் தெரியவில்லை. என்றாலும் கட்டுப்பாட்டுக்கு விரோதமின்றியும் அந்த அம்மாளுக்கு மனத்தாங்கலின்றியும் கீழ்க்கண்ட ஏற்பாட்டைச் செய்தார்.

கடைசிநாள் ஊர்வலமாய்க் கிளம்பிய படம் மறுநாள்காலை ஒன்பது மணி சுமாருக்குக் கல்யாண மகால் வந்து சேர்ந்தபிறகு உற்சவப் பூர்த்தியில் எடுக்கப்படும் கற்பூர ஹாரத்தியும் செய்து படத்தின் எதிரிலேயே ஸ்ரீமதி தனம்மாளைக் கொஞ்ச நேரம் வாசிக்கும்படி செய்து எல்லோரும் கேட்டு ஆனந்தித்தார்கள். நிற்க, பிடில் கோவிந்தசாமிப் பிள்ளைக்குப் பிறகு பெரிய கட்சியாரின் உற்சவத்தைத் திருவீழிமிழலை சகோதரர்கள் முன் நின்று நடத்தி வந்தார்கள். என்றாலும் கோவிந்தசாமிப் பிள்ளையை இழந்த பெரிய கட்சியாரின் பலம் கொஞ்சங் கொஞ்சமாகக் குறைய ஆரம்பித்தது. அந்தக் கட்சியின் வசூல் விஷயங்களில் பெரிதும் ஈடுபட்டிருந்த மருங்காபுரி பிடில் கோபாலகிருஷ்ணையர் விலகிக்கொண்டு ஸ்ரீரங்கத்தில் தமது வீட்டிலேயே தன் சொந்த வசூல் செலவில் ஸ்ரீ தியாகப் பிரம்மத்தின் உற்சவத்தைக் கொண்டாட ஆரம்பித்தார்.

மகாராஜபுரம் விசுவநாதய்யர் சின்னக் கட்சியில் ஐந்தாவது காரியதரிசியாகச் சேர்த்துக் கொள்ளப்பட்டார். புதுக்கோட்டை தட்சிணாமூர்த்திப் பிள்ளை சின்னக் கட்சியிலும் ஈடுபட ஆரம்பித்தார். இதேபோல் முசிறி சுப்பிரமணிய அய்யர், பிடில் ராஜமாணிக்கம் பிள்ளை, பாலக்காடு மணி அய்யர், செம்மங்குடி சீனிவாசய்யர் ஆகியோரும் ஈடுபட ஆரம்பித்தனர். ஆகவே சின்னக் கட்சியார் தங்கள் உற்சவ கைங்கரியத்துக்காகத் தஞ்சாவூர், கும்பகோணம் மதுரை போன்ற இடங்களில் கைங்கரிய கச்சேரிகளை ஏற்பாடு செய்து வசூல்செய்ய ஆரம்பித்தார்கள். தஞ்சாவூர் வசூல்களில் குலமங்கலம் வைத்தியநாத பாகவதரவர்களுடன் நானும், மைலாட்டூர் சாமி அய்யரும் மிருதங்கம் வைத்தியநாதய்யரும் கவனித்துக் கொண்டோம். திருச்சிப் பக்கத்தில் வரக்கூடிய வசூல்களைப் பல்லடம் சஞ்சீவ ராவும் அவர் சிஷ்யரான ராமச்சந்திர சாஸ்திரியும் செய்து வந்தார்கள். செட்டிநாடு மதுரை ஆகிய இடங்களில் அரியக்குடி ராமானுஜ ஐயங்கார் வசூல் செய்தார். கும்பகோணம் பக்கத்தில் தன்னுடைய வசூல்களை மகாராஜபுரம் விசுவநாத ஐயரும் பூதலூர் திருக்காட்டுப்பள்ளி வசூல்களை கோட்டு வாத்தியம் கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகளும் செய்து வந்தனர்.

இப்படியாக உற்சவ வசூல் விஷயத்திலும் அதற்காகக் கைங்கரியக் கச்சேரிகள் செய்யும் விஷயத்திலும் எல்லா வித்துவான்களும் ஈடுபட ஆரம்பித்துவிட்டதால் குலமங்கலம் வைத்தியநாத பாகவதர் தம்முடைய முதுமைப் பருவத்தையும் லட்சியம் செய்யாமல் மிகுந்த குதூகலமாக இதில் ஈடுபட்டார். தஞ்சையில் ஒவ்வொரு இலாகாவிலும் ஜில்லா அதிகாரிகளாக இருந்து வந்த எல்லா உத்தியோகஸ்தர்களையும் 'கெஸட்டட்' ஆபீஸர்களையும் நேரில் கண்டு ஸ்ரீ தியாகப் பிரம்மத்தின் பெருமையையும் திருவையாற்றில் நடத்தப்படும் உற்சவச் சிறப்பையும் பற்றி எடுத்துரைத்து வசூல் செய்ததுடன் அவர்கள் எல்லோரையும் உற்சவத்திற்கு வந்து பார்த்து, கேட்டானந்திக்கும்படி அழைத்தார். அதற்கிணங்கி எல்லா பெரிய உத்யோகஸ்தர்களும் வருஷா வருஷமும் வந்து கொண்டிருந்தார்கள். வந்தவர்களைத் தக்கபடி உபசரித்து வேண்டிய வசதிகளையும் செய்து கொடுத்து அனுப்பி வைப்பார்.

உற்சவத்துக்கு ஏராளமான கூட்டம் வர ஆரம்பித்தபடியால் ஹைஸ்கூலுக்குப் பக்கத்தில் உள்ள விஸ்தாரமான விளையாட்டு மைதானத்தில் பெரிய பந்தலாகப் போட்டு உற்சவத்தைச் சமாளித்து வந்தனர்.

சின்னக் கட்சியில் முதலிலிருந்தே காலைக் கச்சேரிகள் நடத்தும் வழக்கம் இல்லை. பகல் மூன்று மணியிலிருந்து இரவு பத்து மணி வரை சுமார் ஐந்தாறு கச்சேரிகளும் பத்து மணிக்குமேல் கதா காலக்ஷேபமும்



# திருவையாறு திருவிழா

கோட்டு வாத்தியம் துரையப்ப பாகவதர்

## 7. ஸ்ரீ கோவிந்தசாமிப் பிள்ளையின் ஏற்பாடுகள்

பெரிய கட்சியார் தங்கள் உற்சவத்தைப் பலப்படுத்துவதற்காகத் தஞ்சாவூர் ஸ்ரீ சுதர்சன சபையாருடன் ஓர் ஏற்பாடு செய்து கொண்டார்கள். இந்தச் சபையில் சர்க்கார் காரியாலயங்களிலும் மற்ற இலாக்காக்களிலும் உத்தியோகம் வகிக்கும் சுமார் நூற்றைம்பது பேர்கள் அங்கத்தினர்களாயிருந்தார்கள். இவர்களுக்கு நாடகம் நடிக்க வேண்டும் என்ற ஆர்வமிருந்தது; சில நல்ல நடிகர்களும் இருந்தனர். ஆனாலும் நாடகத்திற்கு வேண்டிய திரை, உடை, இடம் போன்ற வசதிகள் இல்லாததால் சபையார் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

இந்தச் சபையாரிடம் பிடில் கோவிந்தசாமிப் பிள்ளைக்கு அபிமானமுண்டு. ஆகவே இந்தச் சபையை ஒரு சங்கீத சபையாக மாற்றி யமைத்து மாதா மாதம் நாடகங்கள் நடத்துவதோடு மட்டுமின்றி ஏதாவது கச்சேரிகளையும் ஏற்பாடு செய்து நடத்துவதால் அதிக அங்கத்தினர்கள் சேருவார்கள் என்று யோசனை கூறினார். தவிரவும் தம்முடைய செல்வாக்கை உபயோகித்து எல்லா சங்கீத வித்துவான்களையும் இதில் ஈடுபடும்படி செய்வதாயும் அப்படிச் சம்மதித்து வருபவர்களுக்கு முதல் தடவையில் சபையார் செலவுகளை மட்டும் கொடுத்தால் போதுமானதென்றும் இதற்குப் பதிலாக சுதர்சன சபையார் வெளியூர்களில் இரண்டு நாடகங்களை நடத்தி அதில் வரும் தொகையை ஸ்ரீ தியாகப்பிரம்ம உற்சவத்திற்கு அளிக்கவேண்டும் என்றும் ஏற்பாடு செய்து கொண்டார்.

கோவிந்தசாமிப் பிள்ளையின் ஏற்பாடு வெகு சீக்கிரத்தில் நல்ல பலனை யளித்தது. நல்ல ஸங்கீதக் கச்சேரிகளைக் கேட்கலாம் என்ற ஆவலினால் அநேகர் அங்கத்தினர்களாகச் சேர்ந்தனர். வெகு சீக்கிரத்தில் அங்கத்தினர்களின் தொகை எழுநூற்றைம்பதுக்கு மேலாகி விட்டது. கச்சேரிகளும் நாடகங்களும் மாறி மாறி நடந்தன. ஏராளமான பொருள் வரவும் ஏற்பட்டது. ஓரே வருஷத்திற்குள் நாடகத்துக்கு வேண்டிய திரைகள் உடைகள் போன்ற எல்லா வசதிகளையும் ஏற்பாடு செய்து கொண்டார்கள். வெளியூர்களில் நாடகமாடி உற்சவத்துக்கு வருவாயும் செய்து கொடுத்தார்கள்.

ராவ்பகதூர் ராமநாதன் செட்டியாரை எல்லோரும் கேட்டுக் கொண்டதின் பேரில் அவர் தம் செலவில் ஒரு ஹாலைக் கட்டிக் கொடுப்பதாய் வாக்களித்தார். தஞ்சாவூர் முனிஸிபாலிட்டிக்குச் சொந்தமான ஓர் இடத்தைத் தொண்ணூற்றொன்பது வருஷக் குத்தகைக்கு மலிவாக ஏற்பாடு செய்து கொண்டு அதில் செட்டியாரின் செலவில் வெகு சீக்கிரத்தில் ஒரு கட்டடத்தைக் கட்டி முடித்து, அந்த ஹாலுக்கு "ராவ்பகதூர் ராமநாதன் செட்டியார் ஹால்" என்று நாமகரணம் செய்தார்கள். இரண்டு மூன்று வருஷங்களில் எல்லா வசதிகளும் கிடைத்து விட்டன. இதற்குள் எல்லா சங்கீத வித்துவான்களும் ஒரு முறை இனாமாகக் கச்சேரி செய்தாகி விட்டது. இனிமேல் இரண்டாந்தடவை கச்சேரி வரும்போது தங்கள் தங்கள் ரேட்டுக் கிடைத்துவிடும் என்று சங்கீத வித்துவான்கள் ஆவலுடன் எதிர்பார்த்திருந்தார்கள். ஆனால் ஆரம்ப காலத்தில் செய்து கொண்ட ஏற்பாட்டின் படி சபையார் நடக்கத் தவறியதால் வித்துவான்கள் ஏமாந்து போனார்கள். பிடில் கோவிந்தசாமிப் பிள்ளையும் 1931-வது வருஷத்தில் காலமானார். சுதர்சன சபையாருக்கு வேண்டிய வசதிகளை வெகு சுலபமாய் ஏற்பாடுசெய்து கொடுத்த அன்னாருக்கு ஒரு ஞாபகச் சின்னத்தையாவது சபையார் ஏற்பாடு செய்திருக்கலாம்.

கோவிந்தசாமிப் பிள்ளை முன்னின்று நடத்திய பெரிய கட்சி உற்சவத்தில் அவருள்ள வரையில் சில கட்டுப்பாடுகள் இருந்தன. அவைகளில் முக்கியமான இரண்டை இங்கு குறிப்பிட விரும்புகிறேன். பெரிய கட்சியில் அவருள்ள வரையில் எந்தப்பெரிய நாதஸ்வர வித்துவானையும், மற்றச் சங்கீத வித்துவான்கள் கச்சேரி செய்யும் மேடையில் உட்கார்ந்து வாசிக்க அனுமதிப்பதில்லை. அவர்கள் கீழே உட்கார்ந்து கொண்டுதான் வாசிக்க வேண்டும். இந்த

டந்திருக்கும்? மல்லி தேம்பி அழும்படி
ப்படி என்னதான் நடந்திருக்கும்?

காமுவுக்கு ஒன்றும் புரியவில்லை. பர
ரப்புடன் புடவைத் தலைப்பை வாரிச்
ருட்டிக் கொண்டு இரண்டு, இரண்டு
டிகளாகத் தாண்டிக்கொண்டு கீழே
றங்கி வந்தாள். வரும்போதே, "என்டா,
ப்பு! அங்கே என்ன அமளி? என்னமோ
ரு வேளை போட்டதைச் சாப்பிட்டுவிட்டுப்
பாகாமே இது என்ன தடபுடல்? பாவம்
வள் சிறிசு! என்ன பண்ணி விட்டா
ளாம்...?" என்று பொரிந்துக் கொட்டிக்
காண்டே வந்தாள் காமு அம்மாள்.

அப்பு விவகாரத்தை விவரிக்காமல்,
ரே வார்த்தையில் அம்மாவை அடக்கி
விட்டான். "இடக்கிறது, இடக்கிறது
ன்று பார்த்தால் இப்படித்தான் ஆகும்.
ன் படித்த நாட்டுப் பெண்ணின் லட்ச
ணத்தைப் பாரு, லட்சணத்தை!" என்று
ட்டும் 'சுட்டாக'ச் சொல்லிவிட்டு, மறுபடி
ம் விட்ட இடத்திலிருந்து போரை ஆரம்
த்து விட்டான்.

பெற்ற பிள்ளையின் சுபாவம் தாய்க்குத்
தெரியாதா? அவன் கொஞ்சம் முன் கோபி.
அவன் ஆட்டமெல்லாம்
த்துப் பதினைந்து நிமி
ஷங்கள்தான். அதற்குப்
பிறகு 'இந்த ஆண்
பிள்ளைக்கா அப்படிக்
கோபம் வந்தது?' என்று
ஆச்சரியப்படும்படி மாறி
விடுவான்.

ஆனால் மருமகள் மல்
லிகா? கெட்டிக்காரி
யில்லையோ? சிரித்துச்
சிரித்துப் பேசி அவனைச்
சாக்குப் பொடி
பாட்டு விடுவாளே?
என்று அந்த வித்தை
எல்லாம் எங்கே ஓடி
ஒளிந்துவிட்டது? காமு
காரணம் புரியாமல் தவி
த்துத் தவித்தாள்.
"என்டி, மல்லி! என்ன
நடந்தது? நீயாவது
சொல்லேன்" என்று
கேட்டுக் கொண்டே
அருகில் வந்தாள்.

மல்லிகா மாமியாருக்
குப் பதில் சொல்வ
தில்லை. அதற்குப் பதி
லாக மாமியாரைப் பிரமிக்க வைத்தான். கொடியில் உலர்த்தி இருந்த புடவையைச் 'சடக்'கென்று உருவினாள். அலமாரியிலிருந்த 'டாய்லெட்' செட்டைத் தாவி எடுத்தாள். அவசர அவசரமாகக் 'காமெரா' உள்ளுக்கு ஓடினாள். கைப்பெட்டியைத் தரதர வென்று இழுத்து அதற்குள் தன் சாமக்கிரியைகளைக் கஷ்டப்பட்டுத் திணித்து விட்டு விர்ரென்று வாசற்பக்கம் விரைந்தாள். செருப்பைக் காலில் மாட்டிக் கொண்டாள்.

பிறகு 'டக்டக்'கென்று சத்தம் கேட்டது. ரிக்‌ஷா ஒன்று வந்தது. மல்லி அதில் அலட்சியமாக ஏறிக்கொண்டாள். அடுத்த தெருவில் இருந்த பிறந்தகத்தை நோக்கிப் புறப்பட்டு விட்டாள்.

இவ்வளவும் மின்னல் வேகத்தில் நடந்தது. அப்பு அசையாமல் பார்த்துக் கொண்டேயிருந்தான். காமு கன்னத்தில் காத்தை ஊன்றியபடி கல்லாய் நின்றாள். "இது என்ன கூத்து? கூப்பிடடா, அவளை!" என்று காமுவின் வாய் என்னமோ கூச்சலிட்டது.

"போனால் போகட்டும்!" என்று சொல்லிவிட்டு அந்த ஆண் சிங்கம் அப்பு,



வாசற் கதவைப் படக்கென்று மூடித் தாழ்ப்பாள் போட்டு விட்டுக் கம்பீரமாகத் திரும்பி வந்தான். காமு அவன் செய்கையைக் கண்டு இன்னும் கொஞ்சம் பிரமித்தாள்!

*

அன்று ஒன்பது மணிக்குமேல் காமு, முன் பக்கத்துப் 'போர்ஷ'னில் குடியிருந்த குடித்தனக்காரப் பெண்ணை 'ஆழம்' பார்த்த போது சண்டைக்குக் காரணம் அவளுக்குச் சற்று புரிந்தது.

அப்பு ஆபீஸிலிருந்து வந்தபோது, மல்லிகா அவனை லட்சியம் செய்யாமல் மேஜை மீது உட்கார்ந்தபடி என்னமோ கதை எழுதிக் கொண்டிருந்தாளாம். அவன் அவளை இரண்டு, மூன்று தடவை அழைத்தும், வாய்கொடுத்துப் பேசாமல் அவள் பாட்டுக்கு எழுதிக்கொண்டே இருந்தாளாம். அப்புவுக்குக் கோபம் வந்து விட்டது. பிறகு அது 'யுத்தமாக'ப் பரிணமித்து விட்டதாம்!

காமுவுக்கு இதைக் கேட்டவுடன் அழுவதா, சிரிப்பதா என்று விளங்கவில்லை. இந்தக் காலத்துப் பசங்களே இப்படித் தான் இருக்கின்றன! என்று அங்கலாய்த்துக் கொண்டாள்.

மல்லிக்குக் கொடுக்கிற சுதந்திரமெல்லாம் கொடுத்து விட்டு, அவள் படித்த பெண், புத்திசாலி என்றெல்லாம் பெருமைப் பட்டுவிட்டு இது என்ன அசட்டுச் சண்டை வேண்டியிருக்கிறது? என்று நினைத்தாள் காமு.

தூக்கம் வரவில்லை. வீடே வெறிச்சென்று இருந்தது, அவளுக்கு. அரை மணிக்கு ஒருதரம் "மல்லி! மல்லி!" என்று கூப்பிடாமல் அவளால் இருக்க முடியவில்லை.

இன்னும் சொல்லப் போனால் காமுவுக்கு என்னென்னமோ தோன்றியது. நாளைக்கு நாலு பேர், தன்னைப்பற்றி ஏதேனும் புகார்களைக் கிளப்பி இந்தப் பிரிவுக்கு மாமியார் மனப்பான்மைதான் காரணம் என்று கயிறு கட்டி விட்டுவிட்டால் என்ன செய்வது என்று சங்கடப்பட்டாள்.

அந்தக் காலத்தில் காமு, சின்னஞ் சிறு பெண்ணாக இருந்தபோது அவள் மாமியார் படுத்திய பாடு மனக் கண் முன் வந்து 'சினிமா' காட்டிற்று. மாமியார் ஸ்தானத்திற்கே தன்னால்தான் இனி வருங்காலத்தில் விமோசனம் ஏற்பட வேண்டும், தான் ஒரு மாமியார் ஆகும்போது தனக்கு வரும் நாட்டுப் பெண்ணைத் தங்கமாக வைத்துக் கொள்ள வேண்டும் என்றெல்லாம் அவள் திட்டமிட்டதுண்டு.

ஆனால் அந்தப் பத்து வருஷ நினைவை பத்தே நிமிஷங்களில் இளங் கன்றுகள் பறித்தெறிந்து விட்டனவே......

காமுவுக்குத் தூக்கம் துக்கமாகப் பீறிட்டுக்கொண்டு வந்தது. நாட்கள் நாலு, ஐந்து என்று போய்க்கொண்டே இருந்தன. அப்பு இஷ்டப்படி ஆபீஸுக்குப் போவதும், வருவதுமாக இருந்தானே தவிர, சற்றேனும் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை.

"ஏண்டா! இதெல்லாம் நன்றாக இருக்கிறதா? சாயங்காலம் ஆபீஸிலிருந்து வரும்போது அவளை அழைத்துக்கொண்டு வந்து சேரு" என்று ஒருநாள் சொல்லிப் பார்த்தாள். அப்பு, அம்மாவைப் பயங்கரமாக விழித்துப் பார்த்துவிட்டு ஆபீஸுக்குப் போய்விட்டான். "அட அசடே!" என்று முணுமுணுத்தாள் காமு.

கடைசியாகக் காமு முடிவு செய்தாள். 'அதுவே சரி' என்று மனச்சாட்சி உள்பட ஆமோதித்தது. வீட்டைப் பூட்டிக்கொண்டு சம்பந்தி வீட்டிற்குப் போனாள்.

*

அன்று மாலை அப்பு ஆபீஸிலிருந்து திரும்பியபோது முன்கட்டு ஊஞ்சலுக்கருகே அதிசயம் காத்திருக்கக் கண்டான். காமு அம்மாள் காலை நீட்டிக் கொண்டு சிரித்த முகத்துடன் உட்கார்ந்து கொண்டிருந்தாள். அப்புவின் தலையைக் கண்டதும், "மல்லி, காபி கொண்டுவா!" என்று ஆக்ஞாபித்தாள். மல்லி, 'சலக் சலக்' என்று கை வளையல்களைக் குலுக்கிக் கொண்டு காப்பியும் கையுமாகப் பிரசன்னமானாள்.

அப்புவை வாய் திறக்க விடாமல் காமு மேலே பேசிக்கொண்டு போனாள்:

"அப்பு! நல்ல வேளையாக ஆபீஸிலிருந்து சீக்கிரமாய் வந்துவிட்டாய். நாளைக்கு நாள் நன்றாக இருக்கிறது என்று மல்லியை அவள் அம்மா 'எண்ணெய் குடிக்க' அழைத்துக்கொண்டு போக, ஆறு மணிக்கு வரப் போகிறாளாம். சந்தோஷமாக உன் பெண்டாட்டிக்கு விடை கொடுத்து அனுப்பு! ஆமாம், சொல்லிவிட்டேன், அவள் பாவம், சிறிசு! என்னத்தைக் கண்டாள்......?"

"அம்மா! நீ தப்பிப் பிறந்தவள்!" என்று அப்பு மட்டுமல்ல; மல்லிகாவும் சேர்ந்து தான் சொன்னாள்.

# பாவம், சிறிசு!

## நவீனன்

ஏனோ தெரியவில்லை; காமு அம்மாளுக்கு அன்று படபடவென்று வந்தது. அறுபது வயது ஆகி விட்ட தள்ளாமை உணர்ச்சி அன்றுதான் பிரதிபலித்தது.

"அப்பாடா!" என்று ஆஸ்வாச மூச்சொன்றை விட்டபடி சற்றுப் படுத்துச் சிரமபரிகாரம் செய்து கொள்ள வேண்டும் என்று தோன்றிற்று.

ஆனால் மனசு கேட்கவில்லை. சற்றுப் போனால் அருமைப் பிள்ளையாண்டான், சைக்கிளைத் தடதடவென்று ரேழி வரை தள்ளிக் கொண்டு ஆபீஸிலிருந்து வந்து விடுவான். அவனுக்கு மனமறிந்து, சுவை அறிந்து சாப்பாடு போட வேண்டும். ஆனால் அந்தப் பொறுப்புக்களைக் கவனிக்கக் காமு அம்மாளிடமிருந்து 'சார்ஜ்' வாங்கிக் கொள்ள காட்டுப் பெண்ணொருத்தி, குறுக்கி யிறுக்கிக் கொண்டு எங்கிருந்தோ வந்து குதித்து விட்டாள். வீடு பூராவும் "மல்லி!" என்னும் மல்லிகாவாக 'மணம்' வீசினாள், அந்தச் சிறுமி. இருந்தாலும் காமு அம்மாளுக்குப் பொறுப்புத் தன்மை போய்விட வில்லை.

"பாவம், மல்லி என்ன இருந்தாலும் சிறுசு. அப்புவின் மனமறிந்து சாப்பாடு போட அவளுக்குத் தெரிய வேண்டுமே! சந்தர்ப்ப மறிந்து அவனுக்குச் சிசுருஷை செய்யத் தெரிய வேண்டுமே......" காமு அம்மாளுக்குச் சதா இந்தக் கவலைதான். தனிக்குடித்தனம் போட்டு வருஷம் இரண்டாகியும் கவலை என்னமோ அவளை விட்டுப் போனபாடில்லை. எதற்கு எடுத்தாலும் "பாவம், சிறுசு" என்று சொல்லிக் கொண்டே பிராணனைக் கையில் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு, வீட்டுக் காரியம் அன்னவையும் காமு அம்மாள் இயந்திரம் போலச் செய்து வந்தாள்.

அப்பு, 'அம்மாவின் சுபாவம் இது' என்று பேசாமல் இருந்தான். மல்லிகா மனதிற்குள் சிரித்துக் கொண்டு, வீட்டை வெறுமனே சுற்றி வந்தாள்!

அன்று இரவு மாமியார் தன்னை அன்போடு அழைத்து, "மல்லி! என்னமோ தெரியவில்லை. என்னை அறியாமல் உடம்பு அசதியாயிருக்கிறது. இன்று அவனுக்கு நீயே சாப்பாடு போடு. கூடத்து அலமாரியில் புதிதாக மாங்காய்த் தொக்கு ஊறுகாய் போட்டு மூடி வைத்திருக்கிறேன். மறந்து விடாமல் எடுத்துப் போடு. அப்புவுக்குத் 'தொக்கு' என்றால் பிராணன்!" என்று கிளிப் பிள்ளைக்குச் சொல்வது போலச் சொன்னபோது, மல்லிகாவுக்குச் சிரிப்புத்தான் வந்தது. தான் பத்தாவது வரையில் படித்துத் தேறி 'சர்டிபிகேட்' வாங்கியதற்கும் மாமியாரிடம் சாப்பாட்டுச் 'சர்டிபிகேட்' பெறுவதற்கும் சம்பந்தமில்லை என்று நினைத்துக் கொண்டாள்.



மேல்மூச்சு கீழ் மூச்சு வாங்க மேல் மாடிக்குக் காமு அம்மாள் ஏறி வந்து அரை மணிகூட ஆகி இருக்காது. கீழே சமையல் கட்டுத் தாழ்வாரத்தில் ஒரே ரகளையாக இருந்தது. அப்பு இரைந்து கொண்டிருந்தான். மல்லிகா அழுது கொண்டிருந்தாள். அதட்டலும், அழுகையும் இரண்டறக் கலந்து காமு அம்மாள் காதில் 'கிண்கிண்'ணென்று ரீங்காரமிட்டது. அப்பு, அதட்டும்படி அப்படி என்ன




### அரிச்சந்திரன்!

வக்கீல் (குறுக்கு விசாரணையில் சாட்சிக் காரனைப் பார்த்து) — நீ இப்பொழுது கூண்டில் பிரமாணம் செய்து விட்டாய். பொய்யே பேசக்கூடாது, ஜாக்கிரதை! இப்பொழுது சொல், வண்டி ஓட்டுவது தானே உன் தொழில்?

சாட்சி:—இல்லை.

வக்கீல்:—இல்லையா? பின்னே உன் தொழில் என்ன?

சாட்சி:—வண்டியில் கட்டியிருக்கும் மாட்டை ஓட்டுவது!

★

### ஓகோ!

உபாத்தியாயர்:—ராமு, ஆறும் ஆறும் எவ்வளவு?

ராமு:—பன்னிரண்டு!

உபாத்தியாயர்:—சரியாய்ப் பார்த்துச் சொல்லு!

ராமு:—ஒன்பது...இல்லை...பதினொன்று.

உபாத்தியாயர்:—ஏன் பத்தாக இருக்கக் கூடாது?

ராமு (உபாத்தியாயர் முகத்தைப் பார்த்து விட்டு):—ஊம்...என்னை ஏமாற்றப் பார்க்கிறீர்களே! ஐந்தும் ஐந்தும் அல்லவா பத்து?

★

### நல்ல பொம்மை!

அம்மா:—நீங்கள் குழந்தைக்கு உடையாத பொம்மை வாங்கித் தந்த லக்ஷணம் போதும்!

அப்பா:—என்ன அதையும் உடைத்து விட்டானா?

அம்மா:—அதை உடைக்க வில்லை; அதைக் கொண்டு எல்லாவற்றையும் உடைத்து விட்டான்!

### அநுமதி வேண்டாம்!

சிறை விசிட்டர் (கைதியிடம்):—உன் பந்துக்கள் யாராவது உன்னைப் பார்க்க வருகிறார்களா, அப்பா?

கைதி:— ஒருவரும் வருவதில்லை, எஜமான்!

சிறை விசிட்டர்:—ஏன், சூப்பரின்டெண்ட் யாரையும் அனுமதிப்பதில்லையா?

கைதி:—இல்லை, எஜமான்! என் பந்துக்கள் எல்லோரும் இங்கேயேதான் இருக்கிறார்கள்.

★

### புரியாது!

அம்மாவும் பிள்ளையும் மனிதக் குரங்கு ஒன்றைப் பார்த்தார்கள்.

பையன் (அம்மாவைப் பார்த்து):—என் அம்மா, இந்தக் குரங்கு மாமா மாதிரியிருக்கிறது அல்லவா?

அம்மா (கோபத்துடன்):—நீ முட்டாள்! அப்படியெல்லாம் சொல்லக் கூடாது தெரியுமா?

பையன்:—ஏன் அம்மா? நான் சொன்னது குரங்குக்குப் புரியாதே!

★

### அப்படியா?

மனைவி:—குழந்தை பிறந்து ஒரு மாதம் ஆகிறதே! அதைப் போய்க் கார்ப்பொரேஷன் ஆபீசில் பதிய வைத்து விட்டு வந்தீர்களா?

கணவன்:—ஐந்து மைல் சுற்று வட்டாரத்தில் அந்த ஆபீஸ் இருக்குமானால் நான் போய் சொல்லக்கூட வேண்டுமா? அதன் குரல் கேட்டிருக்குமே!

★

### பயன் இல்லை!

ஹோட்டலில் சாப்பிடுபவர் (கோபமாக):—ஓய், இதென்ன இட்லியா, மண்ணாங் கட்டியா?

ஹோட்டல்காரர்:—உங்களுக்கு ருசியினால் கண்டு பிடிக்க முடியவில்லையா?

அவர்:—இல்லை, அதனால்தானே கேட்கிறேன்?

ஹோ:—அப்படியானால் நான் சொல்லுவதில் உங்களுக்கு என்ன பிரயோஜனம்?

அமைப்பை வளர்க்கத் தீவிர முயற்சி எடுத்துக் கொண்டிருக்கிறார்கள்.

### திருவிழாக் குதூகலம்

பிப்ரவரி நாலாந்தேதி இலங்கையின் இரண்டாவது சுதந்திர தினத்தைக் கொண்டாட பிரமாதமான ஏற்பாடுகள் நடந்து வருகின்றன. இந்தியக் குடியரசு தினத்தைக் கொண்டாடவும் பிரமாதமான ஏற்பாடுகள் நடந்து வருகின்றன. இந்தியக் குடியரசு தினத்தைக் கொண்டாட தோட்டங்கள் தோறும் இந்தியத் தொழிலாளர் மிக விரிவான தோரணையில் ஏற்பாடு செய்து வருகிறார்கள். எனவே அடுத்த முப்பது நாற்பது தினங்கள் வரையில் இலங்கை திருவிழாக் கோலாகலத்துடனே விளங்கும்! இதற்காக நா தேசங்களிலிருந்தும் பல பத்திரிகை நிருபர்கள் வந்திருக்கிறார்கள்.

### இது என்ன கூத்து?

ரோபரித் தோட்டத் தகராறு திருப்தி வசமாக இன்னும் தீரவில்லை. பட்சபாதமற்ற அரசாங்க விசாரணைச் சபையினால் அளிக்கப்பட்ட தீர்ப்பைத் தோட்ட முதலாளி பிடிவாதமாக ஏற்க மறுப்பதினால் ரோபரித் தோட்டத்தில் மறுபடி வேலை நிறுத்தம் நடக்கிறது. அவர்களை ஆதரித்து மற்றும் பல இடங்களிலும் வேலை நிறுத்தங்கள் நடக்கின்றன. இதனால் தொழிலாளர் மிகுந்த கஷ்ட நஷ்டங்களுக்கு உள்ளாகி யிருக்கிறார்கள். இதில் ஒரு விசித்திரமான விஷயம் என்னவென்றால், தொழிலாளர் பக்கத்தில்தான் நியாய மிருக்கிற தென்பதை அரசாங்கம் உணர்ந்து தீர்ப்புச் சொல்லியுள்ள பொழுதிலும் அந்தத் தீர்ப்பை அமுல் நடத்த அரசாங்கத்துக்குச் சக்தியில்லை. தொழிலாளர் தகராறுகளில் கட்டாய மத்தியஸ்தத்துக்குச் சட்டத்தில் இடமில்லையென்று சொல்லி சர்க்கார் தங்களுடைய பொறுப்பைத் தட்டிக் கழித்து வருகிறார்கள். நியாயமென்று உணர்வதை அமுல் நடத்தச் சட்டம் இல்லாவிட்டால் புதிதாக ஒரு சட்டத்தை ஏன் இயற்றக்கூடாது? நியாயமான சமரசத்துக்கு வர மறுக்கும் முதலாளிகளைக் கட்டாயப்படுத்த ஒரு சட்டமியற்ற வேண்டுமென்று பார்லிமெண்டில் ஸ்ரீ எம். எஸ். சுப்பையா என்ற இந்திய அங்கத்தினர் கொண்டுவந்த தீர்மானம் பல மாதங்களாகியும் விவாதத்துக்கு எடுக்கப் படாமல் இருந்து வருகிறது.

நமது இலங்கைக் கடிதம்

# சட்டமில்லை! சக்தியில்லை!

ரஜனி

கொழும்பு, ஜன. 6

இம்மாதம் இலங்கையின் சரித்திரத்திலே மிக முக்கியமானது. இந்தியாவின் பிரதம மந்திரி பண்டித நேரு, பாகிஸ்தான் பொக்கிஷ மந்திரி ஜனாப் குலாம் முகம்மது, பிரிட்டிஷ் வெளிநாட்டு மந்திரி பெவின், சாம்ராஜ்ய உறவு மந்திரி நோயல் பேக்கர், மற்ற காமன்வெல்த் நாடுகளின் மந்திரிகள் முதலிய பல வெளிநாட்டு மந்திரிகளும் கொழும்பில் கூடுகிறார்கள். இக்கடிதம் பிரசுரமாகும்பொழுது காமன்வெல்த் மகாநாட்டின் அலுவல்கள் முடிந்து விடும். ஆசியாக் கண்டத்தில் பரவும் கம்யூனிஸத்துக்கு அணைபோட்டுத் தடுப்பதுதான் இந்த மகாநாட்டின் இலட்சியம்.

மேற்படி மகாநாடு நடக்கும் போது கம்யூனிஸ்டு ஆதிக்கத்திலுள்ள அகில இலங்கைத் தொழிற்சங்க சம்மேளனம் கொழும்பில் ஒரு சமாதான காங்கிரஸைக் கூட்டுகிறது. அதற்கு, தற்சமயம் இந்தியாவுக்கு விஜயம் செய்துள்ள பிரஞ்சு அணு சக்தி நிபுணர் புரொபஸர் ஜோலியட் கூரி என்ற பிரஞ்சு விஞ்ஞானியும், புரொபஸர் பெர்னல் என்ற பிரிட்டிஷ் விஞ்ஞானியும் வருகிறார்கள். சமாதான காங்கிரஸ் நிர்வாகிகள் ஆர்ப்பாட்டங்கள் நடத்தக் கூடாதென்றும், கூட்டங்களில் ஒலி பெருக்கிகளை உபயோகிக்கக் கூடாதென்றும் போலீஸார் தடையுத்தரவு பிறப்பித்திருக்கின்றனர்.

இந்த மகாநாடு முடிந்தவுடன் நுவரெலியாவில் சர்வதேசத் தொழில் ஸ்தாபன மகாநாடு ஆரம்பமாகிறது. அது மாதக் கடைசி வரை நடக்கும்.

## நடு வழியில் தடை

கண்டியில் சென்ற பத்து வருட காலமாகச் சொந்தத்தில் ஹோட்டல் வைத்து நடத்தும் ஒரு இந்தியர் தமது மனைவியையும் குழந்தையையும் அழைத்து வர இந்தியாவுக்குப் போனார். குடும்பத்துடன் மண்டபத்துக்குச் சென்ற வாரம் வந்த பொழுது அவருடைய மனைவி இலங்கையில் ஏற்கெனவே ஐந்து வருட காலம் வசித்ததற்கு டி. ஆர். ஓ. சர்டிபிகேட் இல்லாததால், மனைவியையும் குழந்தையையும் இலங்கைக்கு அழைத்துப் போகக் கூடாதென்று 'இமிகிரேஷன்' அதிகாரி தடுத்து விட்டார். ஹோட்டல் முதலாளி எவ்வளவோ விவரித்துப் பார்த்தும் பயன்படாமல் அவர் குடும்பத்தை மண்டபத்திலேயே விட்டு விட்டுக் கொழும்புக்குத் திரும்பினார். இங்கு இந்திய ஹை கமிஷனர் காரியாலயத்தின் தலையீட்டினால் குடும்பத்துக்கு வாச பர்மிட்டு வாங்கிக் கொண்டு குடும்பத்தை மறுபடி அழைத்து வருவதற்காக மண்டபத்துக்குப் போக நேர்ந்தது. அன்றைய தினமே வேறு சிலரும் குடும்பத்தை மண்டபத்தில் பரிதவிக்க விட்டு இலங்கைக்குத் திரும்பியதாகக் கூறப்படுகிறது.

## நல்ல பலன்

இந்தியத் தொழிலாளரின் கையைப் பலப்படுத்த இந்திய காங்கிரஸ் மாஜி தலைவரான ஸ்ரீ எஸ். தொண்டமான் கொஞ்ச காலமாக ஒரு புதிய முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார். தொழிலாளரிடையில் வர்க்க பேதமில்லையென்றும், இந்தியராயினும் சிங்களவராயினும் தொழிலாளி தொழிலாளிதான் என்றும், சிங்கள—இந்தியத் தொழிலாளர் பரஸ்பர கட்டுடன் ஒத்துழைத்தால் அரிய பெரிய காரியங்களைச் சாதிக்கலாமென்றும் ஸ்ரீ தொண்டமான் கூட்டத்துக்குக் கூட்டம் பேசுவது நல்ல பலன் அளித்துள்ளது.

சமீபத்தில் இந்திய காங்கிரஸ் நடத்திய பல வேலைநிறுத்தங்களில் சிங்களத் தொழிலாளரும் சேர்ந்து கொண்டனர். ஸ்ரீ தொண்டமான் கூறுவதைப் போல இந்திய—சிங்களத் தொழிலாளரிடையில் நேச உறவு பலப்பட்டு விடுமானால் இந்தியத் தொழிலாளரின் உரிமைகளில் கைவைக்கும் தைரியம் சர்க்காருக்கு ஏற்படாது. ஸ்ரீ தொண்டமான் முயற்சியைப் பின்பற்றி மற்ற இந்திய காங்கிரஸ் தலைவர்களும் தொழிலாளரின் ஒற்று

வெள்ளி:—காலையில் அவரும் ஊருக்குப் போகவேண்டுமாம். இதற்குள் எனது பதிலும் அவரிடம் சேரவேண்டும்! ஒரு முடிவுக்கு வந்தேன்: எடுத்தேன் ஒரு தாளை. உணர்ச்சி வேகத்தில் படபடவென்று எழுதினேன். "தங்கள் இஷ்டம். என் பாக்யம்—லலிதா" இதை மறுமுறையும் படித்துக் கொண்டேன். ஒரு சிறிய கவரில் அதைத் திணித்து, யாருக்கும் தெரியாமல் அவருடைய கோட்டுப் பையில் போட்டு விட்டேன்.

"போய் வருகிறேன் மாமா! அத்தை, போய் வரட்டுமா?"

இது அவர் போகும்போது கேட்ட கடைசிக் கேள்விகள். இதையெல்லாம் ஜன்னல் வழியாகப் பார்த்துக் கொண்டிருந்தேன். அந்த சமயம் என் அண்ணா என் அறைப் பக்கம் வந்தார்.

அவரும் கடைசியாக என் அறையின் வாசற்படியில் நின்றுகொண்டு "கோபால்! கடிதம் போடு" என்று கூறிவிட்டுப் போய் விட்டார். அவரது கண்கள் ஏனோ என்னையே பார்த்தன! என் மனதும் காரணமில்லாத கலக்கத்தில் ஆழ்ந்தது.

இந்த வாரத்தின் ஏழு நாட்களில் எத்தனையோ விதமான கவலை, சந்தேகம், ஆசை, காதல் எல்லாம் தன்னாலியன்ற மட்டும் என் மனதை ஆட்டி வைத்தன.

ஆனால் கடைசியாக என் பெற்றோர்களும் இப்பொழுது எனது கல்யாண ஏற்பாட்டை மும்முரமாகக் கவனிக்கத் தொடங்கி விட்டனர். எல்லோரையும்விட என் பெரிய அண்ணாதான் என் கல்யாண விஷயத்தில் அதிகச் சிரமம் எடுத்துக் கொள்கிறார். ஒரு சமயம் அவரிடம் சென்று ஒன்றுமே அறியாதவளைப் போல் "அண்ணா! உனக்குத்தான் அதிக வேலை பாவம்!" என்றேன்.

அவர் மனதிற்கு என் கேள்வி கிண்டலாகப்பட்டதோ என்னவோ. "என்ன லலிதா, சொல்லுகிறாய்?" என்றார்.

"காதலின் முடிவு எப்படி அண்ணா?" என்றேன்.

அண்ணா இந்தக் கேள்வியை என்னிடம் கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை. சற்று அயர்ந்து போனார். எனினும் சமாளித்துக் கொண்டு "மூன்று வருஷத்திற்குப் பிறகு ஒரு நல்ல முடிவையே பார்த்து விட்டேன்" என்று பதில் அளித்தார்.

'சிதைந்த காதல்' படத்தின் கதாநாயகனின் காதல் ஈடேறவில்லை. காதலினால் கஷ்டம்தான் அடைந்தான். ஆனால் என் கதையில் அதே முகஜாடையுடைய கதாநாயகனின் காதல் ஈடேறி இன்ப வாழ்வு எய்தியதற்குக் காரணமாயிருந்த என் அருமை அண்ணாவும்—கனிணாவும் வாழ்க என்று என் மனதிற்குள்ளே ஆயிரம் முறை கூறினேன்!

## ஒரு வேண்டுகோள்!





போகும் போதும் வரும் போதும் அவர் என்னைப் பார்த்தாரா என்ற எண்ணம் ஏன்? எனக்கே விளங்கவில்லை. ஏதாவது என்னைக் கேட்க மாட்டாரா என்ற ஆவல் என்னை ஆட்டி வைத்தது. மாலை, தோட்டத்தில் பூப்பறித்துக் கொண்டிருந்தேன். பின்னால் யாரோ வரும் காலடிச் சத்தம்! திரும்பினேன்; 'அவர்'தான். என்னையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். சற்று விலகிப் போய் விடலாம் என்று எண்ணினேன். அதற்குள் "லலிதா, சௌக்கியமா? என் தங்கைக்கு உன்னைப் பார்க்க வேண்டுமாம்..." இப்படியாக ஏதோ உளறிவிட்டார். மூன்று வருடங்களாகக் காத்துக் கொண்டிருந்த வாய் இன்று சற்று தைரியத்துடன் இதையாவது பேசிற்றே! ஆச்சரியந்தான்.

வியாழன் :— இன்று காலை தோட்டத்துக் குழாயில் தண்ணீர் எடுத்து வரச்சென்றேன். அவரேதான் மறுபடியும் — அவர் கையில் ஏதோ ஒரு காகித மடிப்பு இருந்தது. "லலிதா! இதோ இந்தக் கடிதத்திற்கு நீ அவசியம் பதில் எழுத வேண்டும்! குற்றமாகத் தோன்றினால் உடனே கிழித்துவிட்டு என்னை மன்னித்து விடு!" என்று மூச்சுத் திணறக் கூறிவிட்டு என்னைப் பார்க்காமலே ஓடிவிட்டார்! ஏன் அவருக்கு இவ்வளவு பயம்? எனக்கே தெரியவில்லை!

இடுப்பில் தண்ணீர்க் குடம், கையில் கடித மடிப்பு, அதை ஒளிக்கவோ, எறிந்து விடவோ தெரியவில்லை. அப்படியே என் அறைக்கு அவசரமாக எடுத்து வந்தேன். யாரும் பார்க்கவில்லைதான். இருந்தாலும் எனக்கு இது பிடிக்கவில்லை! என்ன விபரீதம்! இதெல்லாம் நம்மைப் போன்ற நேர்மையான பெண்களுக்கு அழகா? இவரிடம் ஏன் இந்தக் கடிதத்தை வாங்கினேன்? இதனுள் என்ன எழுதி இருப்பாரோ! என்று பல சந்தேகங்கள் எழுந்தன. ஆனாலும் மார்பு படபடக்க, கைகள் கடிதத்தைப் பிரிக்க, கண்கள் படிக்கத் தொடங்கி விட்டனவே! இதுவும் என்னை அறியாமலா?

"அன்புள்ள லலிதா! இதை உனக்கு எழுதுவது ஒரு சமயம் குற்றமாகப் படலாம். சுருக்கமாகச் சொல்லி விடுகிறேன். உனது பெரிய அண்ணனும் நானும் நெருங்கின பந்துவை விட ஆப்த நண்பர்கள். பல தடவை அவர் எங்கள் வீட்டிற்கு வந்தது உண்டு. என் தங்கை கன்னா அவருடைய குணத்திற்குத் தன்னையே ஒப்படைத்து விட்டாள். இதுவிஷயம் உனது அண்ணாவுக்கும் பூரண திருப்திதான் என்பதைப் பின்பு அறிந்து கொண்டேன். பெற்றோர்கள் இது விஷயத்தில் தடுக்க மாட்டார்கள் என்பதும் எங்களுக்குத் தெரியும். ஆனால் உனக்குக் கல்யாணம் ஆனாலொழியத் தான் சந்தோஷமாக இருக்க முடியாது என்று உன் அண்ணா கூறிச் சுமார் மூன்று வருடங்களாகி விட்டன. இன்னமும் கன்னா அவரையே நினைத்து உருகுகிறாள். கோபாலனை இது விஷயமாகக் கேட்கும் போதெல்லாம் 'என் அருமைத் தங்கைக்கு முதலில் வழி சொல்லு' என்று ஒரே பிடிவாதமாக இருந்து வருகிறார். லலிதா, உன் மனதைச் சற்று திடப்படுத்திக் கொள். அதே மூன்று வருஷமாக நான் உன்னையே நினைத்து வருகிறேன். சிறிது யோசனை செய்து பார்! உனது பதில் எனக்குச் சாதகமாக இருந்தால் இரண்டு ஆத்மாக்கள் தங்கள் வாழ்க்கையில் வெற்றி பெற்று விட்டதாக ஆனந்தம் அடையும். அவை: நானும் எனது அருமைத் தங்கை கன்னாவும்தான்!

இப்படிக்கு,
ஆவைர."

கடிதத்தை முடிப்பதற்குள் என் கண்களில் இரண்டு சொட்டுக் கண்ணீர் உருண்டோடின. அது ஆனந்தக் கண்ணீரா? எனக்கே தெரியாது! பெரிய அண்ணாவின் பெருந்தன்மையைப் பற்றி நினைக்க நினைக்க எனக்கு ஒன்றுமே புரியவில்லை! ஆமாம்! மறந்து போய் விட்டேன். கடிதத்திற்குப் பதில்! இதைப்போன்ற கடிதத்திற்குப் பதில் எழுதி எனக்குப் பழக்கமே இல்லை. எழுதியும் ஆகவேண்டும்!

விடுமா? ஏனோ இந்தச் சந்தேகம் அடிக்கடி என் உள்ளத்தில் எழுகிறது?

திங்கட்கிழமை:—இருள் என்பது எப்போதுமே இந்த உலகத்தைச் சூழ்ந்திருப்பதில்லை. அது போனதும் வெளிச்சம் தானே கவ்வ வருகிறது. என் பயமும் லேசாக மறைந்து நம்பிக்கை எழ ஒரு சந்தர்ப்பம் வாய்த்தது.

எதிர்பாராத விதமாக அவரிடமிருந்து— என் நெஞ்சைக் கவர்ந்த அவரேதான்— என் அண்ணாவுக்கு ஒரு கடிதம் வந்திருந்தது. ஏதோ காரியமாக நாளை இங்கு அவர் வரப்போகிறாராம். கடிதத்தின் முடிவில் அவர்—"சௌ-லலிதா சௌக்கியமா?"... என்று கேட்டிருந்தார். அது அப்படி ஒன்றும் பிரமாதமான விஷயமல்ல. அவர் முன்பு இங்கு வந்திருந்தபோது நான் பதின்மூன்று வயதுச் சிறுமிதான். ஆகவே சாதாரணமாகவேதான் அவர் விசாரித்திருப்பார். இருந்தாலும் இப்பொழுது அந்த வார்த்தைகள் ரொம்பவும் அர்த்த பாவத்தோடு இருப்பதாகத் தோன்றியது.

செவ்வாய்க்கிழமை:—நானும் அம்மாளும் காலை டிபனுக்குப் பலகாரம் தயாரித்துக் கொண்டிருந்தோம். அப்பா இன்னும் படுக்கையிலேயே இருந்தார். அண்ணன்மார் எல்லோரும் "பேட்மிட்டன்" விளையாடச் சென்றிருந்தனர். வாசலில் தபால்காரன் உரத்த குரலில் "அம்மா! தந்தி" என்றான். என் தாயார் பதறிப்போய் அப்பாவை அழைத்து வந்தாள். என்னையறியாமல் என் வாய் "நல்ல சேதியாக இருக்கவேண்டும் ஆண்டவனே!" என்று முணுமுணுத்தது. இதற்குள் அப்பா சாவதானமாக, "துரைராஜ் வருகிறானாம்! காலை வண்டியில் கோபாலை ஸ்டேஷனில் சந்திக்கும்படி கேட்டிருக்கிறான்!" என்று சொன்னார். என் தாயாருக்கு அளவற்ற சந்தோஷம். ஆனால் எனக்கு? ஒரு வித பிரேமை! அதோடு ஏதேதோ பெரிய யோசனைகளும் தோன்ற ஆரம்பித்தன. இரண்டு நாட்களாக யாரைப் பற்றி எண்ணிக் கொண்டிருந்தேனோ அவரே இன்று வருவார்!...நான் சகஜமாகப் பழகலாமா? இல்லை எனது அறையிலேயே இருக்க வேண்டுமா? முன்போல் என்னைப் பார்ப்பாரா? பேசுவாரா? நானும் பதில் அளிக்க முடியுமா? பெற்றோர்களின் மனப்பான்மை என்னவோ? அடே அப்பாடி! எத்தனை கேள்விகள்? எல்லாம் சேர்ந்து ஒரே மனக் குழப்பமாகத்தான் இருந்தது.

புதன்கிழமை:—அதோ 'பூட்ஸ்' சப்தம் கேட்கிறது. ஆம்! அவர்தான் அண்ணாவுடன் என்ன வேடிக்கை! அப்படியே அந்த "மறைந்த காதல்" படத்தின் கதாநாயகனின் சாயல்! கொஞ்சமும் வித்தியாசமில்லை! அம்மாவும் பார்த்து விட்டாள்.

"வா, துரை! சௌக்கியமா? அம்மாவையும் அழைத்து வருவதுதானே! உன் தங்கை சௌக்கியமா?"

என்னது? இவருக்கு ஒரு தங்கையும் உண்டா? இவ்வளவு நாள் எனக்குத் தெரியாதே!

"லலிதா, காப்பியெல்லாம் தயாராக இருக்கிறதா?" இது அண்ணாவின் கேள்வி. "தயார் என்று சொல்லம்மா" என்று அம்மாவிடம்தான் சொன்னேன். ஏனென்றால் பக்கத்தில் அவர் உட்கார்ந்திருக்கிறார். அவர் அண்ணாவின் பக்கத்தில் இருந்தாலும் அவரது கண்கள் வீட்டையே ஒரு சுற்றுச் சுற்றி விட்டன. அந்தக் கண்கள் யாரைத் தேடுகின்றன? பாதி சாத்திய ஜன்னலிடம் என் முகம் அக்கண்களுக்கு அகப்படா போகின்றன? ......



ஒருவர் வெளியில் இருந்து வந்தால் தான் போதுமே, நாம் சும்மா சற்று இளைப்பாற விடமாட்டோமே! எல்லாவற்றையும் பன்முறை விசாரித்தாயிற்று. ஒரு வழியாகக் காப்பியும் ஆயிற்று! அவரவர்கள் ஆபீசுக்குப் போய் விட்டனர். பெரிய அண்ணா மட்டும் மூன்று நாளைக்கு லீவு எழுதி அனுப்பி விட்டார்.

என்றுமில்லாத அலங்காரம் எனக்கு இன்று எதற்கு?

# ஏழு நாட்கள்

◇ பாபுராயன் ◇



ஆமாம்! என் அறையில் உட்கார்ந்திருந்த எனக்கு நன்குக் கேட்டது, என் சகோதரர்களின் வாதப்பிரதிவாதங்கள். ஒருவர் காதல் என்பதே ஒரு அசட்டு மனப் பிரமை என்று வாதித்தார். இன்னொருவர் "காதல் எப்போதும் காடு முரடான பாதையிலேயே செல்கிறது" என்றார். "காதலின் முடிவும் சோகமானதுதான்" என்று முடித்தார் என் முதல் அண்ணா.

இதைக் கேட்டதும் என் மனம் கலங்கியது. அப்படியானால் என் காதலும்...... சோகத்தில்தான் முடியுமா? இதுவும் அழிந்து விட வேண்டியதுதானா? என்று எண்ணியதும் என் நெஞ்சு பொருமியது.

சனிக்கிழமை:—வழக்கமான விதி அது. சனிக்கிழமை என்றால் என் சகோதரர்கள் சினிமாவுக்குப் போய்விடுவார்கள். அன்றும் கிளம்பி விட்டார்கள். ஆனால் வீட்டில் அம்மாவும் அப்பாவும் இல்லாததால் என்னைப் பற்றிய கவலை ஏற்பட்டது. கடைசியில் நானும் ஒருவழியாகக் கிளம்பி விட்டேன்.

படம் ஹிந்தி பாஷையில் இருந்தாலும் கதை நன்றாகப் புரிந்தது. "அழிந்த காதல்" "சிதைந்த காதல்"— இப்படி எத்தனையோ ரகம் உண்டு. அந்த வகையில் சேர்ந்தது அது. ஆனாலும் படத்தின் முடிவு என்னை ஒரு வகையில் கொஞ்சம் உலுக்கிவிட்டது. காதலர்களின் முடிவு மிகவும் பரிதாபம்! என்னவோ சொல்ல முடியாத ஒரு ஏக்கம் என் மனசில் படர்ந்தது. ஏன்?

காரணத்தை நினைத்தால் சிரிக்கத்தோன்றும். ஆனாலும் அப்போது அது என்னை வதைத்து விட்டது. படத்தின் கதாநாயகன் ஏறக்குறைய என் நினைவிலேயே பதிந்திருந்த ஒரு மனிதரின் ஜாடையாகவே இருந்தான். அவன் காதல்—படத்திலே தான்—மண்ணாகி விடுகிறது. அவன் கட்டிய ஆசைக் கோட்டைகள் அழிந்து விட்டன. அவன் காதல் சிதைந்து காற்றிலே பறக்கிறது! ஒருகால் என் காதலும் அப்படியாகி விடுமோ! இது அசட்டுத்தனம்தான். இருந்தாலும் மனசு வேகமாக அடித்துக் கொண்டது.

ஞாயிற்றுக்கிழமை:—சனிக்கிழமை பார்த்த படத்தின் விரிவான விமர்சனம் எங்கள் வீட்டில் வெளியாகிக் கொண்டிருந்தது.

அப்படியொன்றும் நான் கண் மூடித்தனமாகக் காதல் கொள்ளவில்லை. அவர் எங்கள் குடும்பத்துக்கு ரொம்ப வேண்டியவர். என் பெரிய அண்ணாவின் 'காலேஜ்' நண்பர். தங்கமானவர் என்று எங்கள் அப்பாவே சொல்லியிருக்கிறார். மூன்று வருஷத்துக்கு முன் அவர் இங்கே வந்திருந்தார். அவர் எங்கள் வீட்டு விருந்தினர் என்ற நினைவே தோன்றவில்லை எனக்கு. எத்தனையோ வருஷங்கள் நன்றாகப் பழகியது போலவே இருந்தது, அவர் நடந்து கொண்ட மாதிரி. கள்ளங்கபடமற்றவர். கலகல என்று சிரித்துப் பழகும் அவர் என் நெஞ்சிலே 'ஜம்' என்று உட்கார்ந்து விட்டார் அப்படியே! ஸ்திரமாக ஒரு இடம் பெற்று விட்டார் போலும்.

அவர் எங்கள் தூரத்துப் பந்து என்று கூடச் சொல்லிக் கொண்டார்கள். இருந்தாலும் நான் எப்படிப் போய் என் பெற்றோரிடம் "அவரைக் கல்யாணம் செய்து வையுங்கள்" என்று சொல்வது? எனக்கு நாகரிகத்தின் அந்தத் துணிவு வருவதற்குள் ஒரு சமயம் அவருக்குக் கல்யாணம் ஆகி விடுமோ என்னவோ! இதை நினைத்தாலே எனக்குப் "பகீர்" என்றது. அவர் இப்பொழுது எங்கே இருக்கிறாரோ?

சினிமாக் கதாநாயகன் அவர் மாதிரியே இருந்தான். அவன் காதல் அழிந்துவிட்டது. ஒருகால் என் காதலும் அப்படியாகி



# தீராத கடிகாரத் தொல்லை!

தீராத கடிகாரத் தொல்லை—இதைத்
தெருவிலே எறிந்தாலும் எடுப்பார்க ளில்லை!

சின்ன முள் கண்ணான கண்ணு—அது
சிறிதும் நகராது பொழுதோடினாலும்
என்னப்பன் என்னய்ய வென்று—அதை
இடம் மாற்றி மணி பார்த்துச் சரி செய்ய வேண்டும்.

பெரிய முள் அறியாது சூது—அது
பிறந்ததே என் கடன் சுற்றத் தானென்று
துரிதமாய் எண்களைக் காட்டி—ஏதும்
துயரப்படாமலே பொழுதெல்லாம் ஓடும்.

இரு முள்ளும் ஒருவேளை நினைத்தால்—நின்ற
இடம் விட்டு நகராமல் பிடிவாதம் செய்யும்.
பொறுமை இழந்திடும் உள்ளம்—சாவி
போதாதோ வென்று வேகமாய் கொடுப்பேன்

'ஏர் ஸ்பிரிங்கு' பழுதாகிப் போகும்—உடனே
'இருதம்பி' என்று மெயின் ஸ்பிரிங்கும் உடையும்
'பாரிதோ' நான் மட்ட மில்லை—என்று
'பாலன்ஸ் வீலு'மோர் ஜாலம் புரியும்.

சைனா பஜார் பக்கம் போவேன்—அதைச்
சரி செய்து கொள்ளவோர் கடை தேடிக் கொடுப்பேன்
ஐந்தாறு முறை ரிப்பேர் ஆச்சு—என்
ஆஸ்தியில் பாதி கரைந்தெங்கே போச்சு!

மாமனார் கொடுத்த பரிசு—என்
மானத்தைச் சமயத்தில் ஏலத்தில் விடுது
போதாத குறைக்கென் மேலே—என்
பெண்டாட்டிக் கெத்தனை உயிருக்கு உயிரு

மனைவியின் தொல்லை போதாதோ?—என்
மாமனார் வஞ்சத்தை நாளெல்லாம் தீர்க்கக்
கடிகாரப் பரிசும் எதற்கு—என்னை
கேவலப் படுத்தி வேடிக்கை பார்க்க! (தீராத)

—காட்டூர்க் கண்ணன்



இருந்தால்கூட அதையெல்லாம் மறந்து விடத் தீர்மானித்தான்.

ஆகவே, மறுவாரம் கல்யாணத்துக்கு எல்லா ஏற்பாடுகளும் செய்தார்கள். பிச்சன் பதினாறு மைல் தள்ளியுள்ள ஒரு ஊருக்கு ஜவுளி எடுத்து வரப்போனான்.

ஜவுளி எடுத்துக்கொண்டு திரும்பி அதிகாலையில் நான்கு மணிக்கு வந்து சேரும் ரயிலில் இறங்கி ஊரை நோக்கி வந்து கொண்டிருந்தான். நல்ல இருட்டு. ஸ்டேஷனுக்கு அருகிலேயே ஒரு உருவம் அவனிடம் நெருங்கி வந்து "மேற்கே போகும் வண்டி வர நேரமாகிவிட்டதா?" என்று கேட்டது. வேறு யாருமில்லை மாலையம்மாள்தான் அது.

பிச்சன் உடனே தெரிந்து கொண்டான்; திடுக்கென்றது அவனுக்கு. அப்போதுதான் கொஞ்சம் முன்னால் அவளைத் தாண்டி ஓர் ஆண் உருவம் போனது ஞாபகத்துக்கு வந்தது.

"மாலையம்மா, இந்த நேரத்திலே இங்கே எப்படி வந்தாய்?" என்று பதற்றத்தோடு கேட்டான்.

"மச்சான், நான் பாவி!" என்று சொல்லிக்கொண்டு அழ ஆரம்பித்தான்.

"அழாதே மாலையம்மா. ஒன்றுக்கும் கவலைப்படாதே. என்னிடம் ஒளிக்காமல் சொல்லு. என்னால் செய்ய முடிகிறதைச் செய்கிறேன்."

"இல்லை, மச்சான்! மயிலாண்டானைத் தான் கட்டிக்கொள்ள வேண்டுமென்று தீர்மானித்திருந்தேன். போன வருஷமே என்னைக் கட்டிக் கொள்வதாகச் சொல்லியிருந்தான். அப்புறம் வியாபாரம் அது இது என்று ஊர் ஊராக போய் விட்டான். இப்போ நான்......நான்......' என்ற போது அவள் நா குழறியது வார்த்தை சரியாக வெளி வரவில்லை.

"சும்மா சொல்லு அழாதே, மாலையம்மா" என்று தைரியமூட்டினான் பிச்சன்.

"நான் தாயாகப் போறேன்!"

பிச்சன் இதை எதிர்பார்த்தான்!

"மாலையம்மா, ஒன்றுக்கும் கவலைப் படாதே! முன்னே போனது மயிலாண்டான்தானே?"

"ஆமாம்."

"சரி. இந்தச் சமாசாரத்தை நான் யாரிடமும் சொல்ல மாட்டேன். நீ என்னை நம்பு. என்னமோ உங்கள் இரண்டு பேருக்கும் ஒடி போயிருக்கிறது. சரி நீங்க எங்கே போகத் தீர்மானித்திருக்கிறீர்கள்?"

"செம்மலைத் தேயிலைத் தோட்டத்துக்கு" என்றான்.

"சரி, போங்கள். நீ ஊரிலே ஏதாவது நடக்கும் என்று ஒன்றுக்கும் கவலைப் படாதே. போ" என்று சொன்னான். சட்டென்று ஒரு யோசனை உதித்தது அவனுக்கு. இதுவரை தோளில் சுமந்து கொண்டிருந்த ஜவுளிப் பொட்டலத்தை அவிழ்த்து. அதில் மேலிருந்த பட்டுப் புடவையை எடுத்து, "இந்தா மாலையம்மா! இது உனக்கு என்று நான் ஆராய்ந்து பார்த்து எடுத்தது. அது உனக்குத்தான்" என்று மனத் திருப்தியோடு அவளிடம் கொடுத்தான்.

## பஞ்சம் ஏது?

சர்க்கரைப் பஞ்ச விசாரணைக் கமிட்டி கூடிய சீக்கிரம் அதன் அலுவல்களை ஆரம்பிக்கலாம்.

சர்க்கரைக்காவது, பஞ்சமாவது! இல்லவே இல்லே.

எவ்வளவு பெரிய சம்சாரி குடும்பத்தைச் சீராக நடத்துவான் என்று தனக்கு நம்பிக்கை இருப்பதாகவும் வெளியிட்டான்.

எனவே பிச்சனது பெற்றோர்களும் உறவினர்களும், நெடுங்கான் குடும்பத்தார் தோப்புத் தாவாரத்திலிருந்து திரும்பி வரும், பெண் கேட்கச் சென்றார்கள். நெடுங்கானுக்கு உள்ளூற இந்தக் குடும்பத்தில் சம்பந்தம் செய்து கொள்ள வேண்டுமென்று ஆசை. அதை வெளிப்படையாகவே சொல்லி உடனே ஒப்புக் கொண்டு விட்டான்.

பிச்சனுக்கு இந்தச் சேதி தெரிந்தது முதல் அடக்கமுடியாத சந்தோஷம். இன்னொரு விதத்திலும் அவனுக்குச் சுகம். உள்ளூரிலேயே பெண் கிடைத்து விட்டதனால் வேலை ஜோலிகளைப் போட்டுவிட்டு அசலூரிலுள்ள மாமனார் வீட்டுக்குப் போக வேண்டாமல்லவா?

ஆனால் ஒரு வாரங் கழித்துப் பிச்சன் குடும்பத்தார் தங்களுக்குள் 'கிசுகிசு' வென்று ஏதோ பேசிக்கொள்ள ஆரம்பித்தார்கள். கடைசியில் அது பிச்சன் காதிலும் வந்து விழுந்தது. அதாவது மாலையம்மாளுக்கும் அதே ஊரிலுள்ள மயிலாண்டான் பண்டாரத்துக்கும் சிநேகம் உண்டென்று. பிச்சன் மனம் சங்கடமடைந்தது. 'மாலையம்மாள் அப்படிப் பட்டவளா? ரொம்பவும் நல்ல பெண்ணாக நடந்து கொண்டாளே. ஒருவேளை இது வீண் புரளியோ' என்றெல்லாம் மனம் கலங்கினான். அந்த அவதூறு அப்படியே மங்கி மறைந்துவிட வேண்டுமென்று தெய்வத்தை வேண்டிக் கொண்டான்.

ஆனால் நாளுக்கு நாள் அது வளர்ந்தது. மயிலாண்டான் ஒரு வேஷக்காரப் பயல். வெள்ளை வேட்டிப் பண்டாரமாகத் திரிபவன். உடல் வேலை என்றால் அவனுக்குப் பிடிக்காது. ஊரில் கொஞ்ச நாள் கடை கண்ணி வைத்திருந்தான். அப்புறம் புடவை வியாபாரம் என்று சொல்லி ஊர் ஊராகத் திரிந்தான். ஆனால் கெட்டிக்காரன். ஒன்று அவனைப்பற்றி சொல்ல வேண்டும். யாருடனும் வம்புக்குப் போகமாட்டான். யார் கண்டது? மாலையம்மாள் தன் மனதை அவனுக்குப் பறிகொடுத்திருக்கலாம்.

பிச்சன் குடும்பத்தார் நெடுங்கானிடம் போய் இதைப்பற்றிப் பேச்சுக் கொடுத்துப் பார்த்தார்கள். அவன் இது வீண் பழி என்றும் ஊர் சொல்வதை அவர்கள் நம்பிக் கல்யாணத்தை நிறுத்த வேண்டாமென்றும் கேட்டுக் கொண்டான்.

எனவே பிச்சன் குடும்பத்தார் கல்யாண ஏற்பாடுகள் செய்ய ஆரம்பித்தார்கள். மயிலாண்டான் ஊரைவிட்டே போய் விட்டதாகப் பேச்சு பிறந்தது. பின்பு அது வாஸ்தவம் என்றும் தெரிய வந்தது.

பிச்சன் பெருமூச்சு விட்டான். வந்த அவதூறுப் பேச்சில் ஏதாவது உண்மை



# மெய்க் காதல்

[ ஷண்முகவேல் ]

மயிலாடிவாரத்திலுள்ள நஞ்சையில் ஒரு மூன்று ஏக்கரா நிலம் பயிர் செய்ய வசதியாகக் கிடைத்தது பிச்சனுக்கு. ஊரை விட்டுச் சுமார் ஐந்து மைல் தூரம் தள்ளியிருக்கும். ஏரும் சீரும் எடுத்துக் கட்டிக்கொண்டு சென்று வேலை செய்ய வேண்டும். நடுகைக்காலிலும் அறுப்புக் காலிலும் நாலைந்து நாள் அங்கேயே குடும்பத்தோடு தங்கி விட்டால் காரியத்தைச் செம்மையாக முடித்துவிடலாம். தண்ணீரைப் பற்றிக் கவலை இல்லை. கால்வாய் மடை திறந்து மூடிவிடலாம். உரமே தேவையில்லை. நிலம், 'கதிர் உழக்கு நெல் காணும்' செழுமையுள்ளது.

பிச்சனுக்கு, தானே வரும் இந்த நிலத்தை விட்டுவிட இஷ்டமில்லை. எனவே குத்தகை விஷயங்களை உடனே எழுதி முடித்து விட்டான். இதற்கு மறு நாள் நிலத்தைப் போய்ப் பார்த்து விட்டு வர ஒரு மண் வெட்டியோடு மட்டும் அதிகாலையில் புறப்பட்டுச் சென்றான். அன்றே கொஞ்சம் வேலை ஆரம்பித்துவிட எண்ணி இடிந்த வரப்புகளைச் சீர் செய்தான். வாய்மடை அருகில் குவிந்த மணல் திட்டுகளை வாரி எறிந்தான். இடிந்த ஓடையைச் செப்பனிட்டான். வேலை செய்த உற்சாகத்தில் நேரம் போனது தெரியாமல் உச்சிவேளை திரும்பி விட்டது. மணி இரண்டுக்கு மேலிருக்கும். சுய உணர்ச்சி வந்தபோது நல்ல பசி உண்டாகியிருந்தது. சரி, இன்று வேலை இவ்வளவுதான்; புறப்பட வேண்டியதுதான் என்று மண் வெட்டியைத் தோளில் போட்டுக்கொண்டு ஊர் திரும்பினான்.

பசி அதிகமாக இருந்ததால் நடை தளர்ந்தது. சுமார் இரண்டு மைல் தூரத்துக்கு இப்புறம் ஒரு குடிசையும் தோப்பும் தென்பட்டது. அவனுடைய ஊரைச் சேர்ந்த நெடுங்கான் குடும்பத்தினர் அங்கே வந்து தங்கி அந்தத் தோப்பிலும் அதைச் சுற்றியுள்ள நிலங்களிலும் பாடுபடுவார்கள். குடிசைக்குமேல் ஓலை இடுக்கு வழியே புகை வந்து கொண்டிருந்ததால் நெடுங்கான் குடும்பம் அங்கே இருக்கிறது என்று தீர்மானம் செய்து கொண்டு தோப்புக்குள் நுழைந்து குடிசையை அடைந்தான்.

பிச்சன் சத்தம் கொடுத்ததும் குடிசைக்குள்ளிருந்து மாலையம்மாள் வந்தாள்.

"யாரு? மச்சானா? என்ன மச்சான், இவ்வளவு தூரம்? தோளிலே மம்பட்டி! இங்கே பக்கத்திலே பயிர் ஏதாவது செய்றீங்களா?" என்றாள்.

பிச்சன் விஷயத்தைச் சொன்னான். ரொம்பவும் களைப்பாக இருப்பதாகவும் தண்ணீர் சாப்பிட்டு விட்டுப் போக வந்ததாகவும் கூறினான்.

மாலையம்மாள் அவன் முகத்திலிருந்து—களைத்துப் போயிருக்கிறான் என்பதை அறிந்து கொண்டாள் "தண்ணீரா, ஏன், நான் சாப்பாடு போட்டால் மாட்டேன் என்று சொல்லுவீர்களோ?" என்று முகம் மலர்ந்து சொல்லி விட்டு ஒரு பாத்திரத்தில் பழையது வட்டித்து, பயற்றுத் துகையலோடு கொண்டு வைத்தாள். பிச்சனுக்கு மற்றவர் வீட்டில் நினைவு தெரிந்து அதுவரை கை நனைத்ததாக ஞாபகம் இல்லை. சொந்தக்காரர் வீட்டில் கூட ஏதாவது நல்லநாள் விசேஷ நாளில் கூடமாட இருந்து காரியங்களைச் செய்து விட்டுத் தன் வீட்டுக்குச் சாப்பிட வந்து விடுவான். இது அவன் சுபாவம். ஆனால் இப்போது பாத்திரத்தில் வட்டித்த உணவை மறுத்து மாலையம்மாள் மனது நோகச் செய்ய அவனுக்கு விருப்பமில்லை. எனவே, கைகளைச் சுத்தி செய்துகொண்டு சாப்பிட்டான்.

மாலையம்மாள் நெடுங்கானுடைய தலை மகள். நிறம் கருப்புமில்லை சிவப்புமில்லை. மாந்துளிர் நிறம். கண்களில் ஒரு அலாதி சோபை, இளமை முறுக்கோடு மான்போல் துள்ளி ஓடி ஆடி வேலை செய்வாள்.

மாலையம்மாளைத் தவிர மற்றவர்கள் சற்று தூரத்தில் வேலை செய்து கொண்டு நின்றார்கள். இன்னும் ஒரு வாரம் அல்லது பத்து நாளைக்கு அங்கே வேலை இருக்கிறதென்றும் அப்புறம்தான் ஊருக்கு வரப் போவதாகவும் சொன்னாள்.

பிச்சன் அவளிடம் விடைபெற்றுக் கொண்டு திரும்பினான். பின்பு நெடுங்கான் முதலியோர் வேலை செய்து கொண்டு நின்ற இடத்திலும் போய்ச் சற்று நேரம் பேசி விட்டு ஊர் வந்து சேர்ந்தான்.

மாலையம்மாளைப் பார்த்தது முதல் பிச்சனுக்கு அவளைப்பற்றியே நினைப்பு. அப்போது அவன் கல்யாணப் பேச்சு நடந்து கொண்டிருந்தது. மாலையம்மாளை இவ்வளவு நன்றாக இதுவரை அவன் பார்த்தது கிடையாது. எனவே தன் தாயாரிடம் மட்டும் மாலையம்மாளைப் பற்றிச் சொன்னான். மாலையம்மாள் வந்தால்

சரஸ்வதி சொன்னாள்: “சரோஜாவுக்கு எப்பவுமே தலையில் கூந்தல் அதிகம் கிடையாது. எங்கள் ஹாஸ்டலில் பல மாணவிகளுக்குக் கூந்தல் நீளமாகவும் அழகாகவும் இருக்கும். அதைப் பற்றி ரொம்பவும் பெருமைப்பட்டுக் கொள்வார்கள். சரோஜாவும் அரைடஜன் சவுரிகளை வாங்கிவைத்து, மாறி மாறி அணிந்து கொண்டு சர்வ ஜாக்கிரதையாகத் தன் நீண்ட கூந்தலைப் பற்றிப் பெருமையாகப் பேசிக் கொள்வாள். சக மாணவர்களுக்கே இந்த விஷயம் தெரியாது. முதலில் எனக்கே தெரியாது.”

இது வரையில் வண்டிக் கதவண்டையிலேயே நின்று கொண்டிருந்த ஆடுதுறையில் ஏறிய மனிதர் என் பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொண்டார். அவரும் சரஸ்வதி மேலே சொன்ன கதையைக் கேட்டார்.

சரஸ்வதி சொன்னாள்: “சரோஜாவுக்கும் லேடி வார்டனுக்கும் ஏதோ ஒரு சிறு விஷயம் பற்றி வாக்குவாதம் முற்றியது. சரோஜாவைச் சமாதானப் படுத்துகிற முயற்சியில் லேடி வார்டன் அவளுடைய தோள் பட்டையைப் பிடித்தாள். தோள் பட்டை அவள் கையில் அகப்படவில்லை. சரோஜா நகர்ந்து விட்டாள். அவளுடைய நீண்ட கூந்தல்தான் லேடி வார்டன் கையில் அகப்பட்டது”

“...உ...ம்......” என்றேன் நான்.

என் பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஆசாமியும் கதையைச் சுவைத்துக் கேட்பது மாதிரி இருந்தது.

சரஸ்வதி சொன்னாள்: “அவ்வளவுதான். சரோஜாவின் சவுரி வார்டன் கையில் இருந்தது. அப்போது சரோஜாவுக்கு வந்த கோபத்தைப் பார்க்க வேண்டுமே! அடாடா! அடாடா!” என்றாள் சரஸ்வதி.

இதைச் சொல்லி விட்டு சரஸ்வதி தன் பின்னலை எடுத்து முன்னால் விட்டுக் கொண்டாள். கை விரல்களால் தடவி விட்டுக் கொண்டாள். அவள் பின்னல் சாட்டை மாதிரி நீளமாக மேகம் போல இருண்டிருந்தது.

சரஸ்வதி சொன்னாள்: “சரோஜாவுக்கு உண்மையிலேயே தலை மயிர் ரொம்பவும் குறைச்சல்தான். எலிவால் மாதிரி ஒரு சாண்தான் இருக்கும்!” என்றாள்.

தியாகராஜபுரத்தில் ஒரு நிமிஷம் நின்று விட்டு வண்டி கிளம்பியது.

“அப்புறம்?” என்றேன் நான்.

“சரோஜா வார்டனைப் படாத பாடு படுத்தி வைத்துவிட்டாள். இந்தச் சனியன் விட்டால் போதும் என்று லேடி வார்டன் தானாகவே ராஜிநாமாச் செய்துவிட்டுப் போய்விட்டாள்.”

“இந்த மெதுவான ரெயிலையும் இவ்வளவு வேகமாகப் போகச் செய்து விட்டீர்களே, சபாஷ்! அந்த உதவிக்கு என் நன்றி! நான் வருகிற ஸ்டேஷன் நரசிங்கன்பேட்டையில் இறங்குகிறேன்” என்றேன்.

நான் சொன்னதைக் காதில் வாங்காமல் சரஸ்வதி சொன்னாள்: “அந்த சரோஜாவை நான் அதற்கப்புறம் பார்க்கவில்லை. என்ன செய்கிறாளோ தெரியவில்லை” என்று கூறித் தன் தலைப் பின்னலைப் பின்னால் எடுத்து விட்டுக் கொண்டாள்.

என் பக்கத்தில் உட்கார்ந்திருந்த, ஆடுதுறையில் ஏறிய ஆசாமி ஏதாவது சொல்லலாமா வேண்டாமா என்று தயங்குபவர் போலச் சிறிது நேரம் இருந்தார். பிறகு சொன்னார்: “அந்தச் சரோஜா என்னைக் கலியாணம் செய்து கொண்டாள். நான் ஒரு தாவர நூல் ஆராய்ச்சியாளன்” என்று தம்மையே அறிமுகம் செய்து கொண்டார்.

“அப்படியா? உங்களைச் சந்தித்தது பற்றி ரொம்பச் சந்தோஷம். சரோஜா சௌக்யமாயிருக்கிறாளா? ரொம்ப நாளாகச் சரோஜாவைப் பார்க்க வேண்டும் என்று எனக்கு ஆவல்!” என்று விசாரித்தாள் சரஸ்வதி.

ரெயில் நரசிங்கன் பேட்டையில் நின்று கொண்டிருந்தது.

ஆடுதுறை ஆசாமி சொன்னார் “இன்னமும் சரோஜாவுக்கு அதே எலி வால் பின்னல்தான்!” என்று.

கௌரிக்கும் சரஸ்வதிக்கும் “நமஸ்காரம். வரட்டுமா? நான் இங்கே இறங்குகிறேன்” என்றேன்.

கௌரி உட்கார்ந்தபடியே கைகூப்பினாள். சரஸ்வதி எழுந்து கை கூப்பினாள். அவள் பின்னல் கண்ணாடி ஜன்னல் தாழ்ப்பாளில் சிக்கிக் கொண்டிருந்ததை அவள் கவனிக்கவில்லை. எழுந்த வேகத்தில் அவள் தலைச் சவுரி ஜன்னல் தாழ்ப்பாளிலேயே சிக்கி நின்று விட்டது.

சரஸ்வதிக்கும் சுயத் தலைமயிர் அதிகம் இல்லைதான். எலி வாலுக்கும் ஓரங்குலம் அதிகம் இருக்கலாம்.

இதை எல்லாம் கவனித்த மாதிரியே காட்டிக் கொள்ளாமல் நரசிங்கன் பேட்டையில் இறங்கி நான் என் வழி நடந்தேன்.

போட்டுக் கொண்டாளே, சரோஜா..." என்று சரஸ்வதி சொன்னதும், எனக்கும் அவர்கள் பேச்சில் கலந்துகொள்ள ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது.

"அந்த சரோஜாவை எனக்கும் தெரியும். பட்டணத்தில்.........ஹாஸ்டலில் தங்கி பி.ஏ. படித்தாளே?" என்றேன் நான்.

"ஆமாம்" என்றாள் சரஸ்வதி. ஒரு விநாடி கழித்துச் சிரித்துவிட்டுச் சொன்னாள்: "ஜர்னலிஸ்டுகளுக்குப் பொறுமை ரொம்ப வேணும் என்று சொன்ன உங்களுக்கே பொறுமை அதிகம் இல்லையே!"

"எனக்குப் பொறுமை ஏது? நான் கேவலம் ஆண். தவிரவும் நான் ஜர்னலிஸ்டு அல்ல. எப்பொழுதாவது விஷயம் அகப்பட்டால் மட்டும்தான் எழுதுவேன். இதையெல்லாம்விடச் சிறந்த காரணமுண்டு நான் பொறுமை இழந்ததற்கு. அந்த சரோஜா லேடி வார்டனுடன் சண்டை போட்டதெல்லாம் பற்றி அந்த நாட்களில் பத்திரிகைகளிலெல்லாம் வெளிவந்தது. லேடி வார்டன் ராஜிநாமாச் செய்துவிட்டது வரையில் செய்தி வந்தது. ஆனால் அந்தச் சண்டையின் காரணம் பற்றி எதுவும் வெளி வரவில்லை......" என்றேன் நான்.

"சரோஜாவைத்தான் தெரியுமென்கிறீர்களே? கேட்டுப் பார்க்கிறதுதானே?" என்றாள் சரஸ்வதி.

ஏது, நம்மை மடக்கிவிடுவாள் போல் இருக்கிறதே என்று எண்ணிக்கொண்டே நான் சொன்னேன்: "சரோஜாவைக் கேட்காமலா? கேட்டுக் கேட்டுப் பார்த்தேன். அவள் சொன்னால்தானே! யாரோ ஒருத்தியைக் கொணர்ந்து வார்டனாகப் போட்டுவிட்டார்கள்" என்று திரும்பத் திரும்பச் சொன்னாளே தவிர வேறு எதுவும் சொல்ல மாட்டேன் என்று சொல்லிவிட்டாள்!"

"சரோஜாதான் அந்த லேடி வார்டனைப் படாத பாடு படுத்தி ராஜிநாமாச் செய்கிற வரைக்கும் கொண்டுவந்து விட்டுவிட்டாள்" என்றாள் சரஸ்வதி. ஒரு விநாடி கழித்துத் தொடர்ந்தாள்: "விஷயம் என்னவோ ரொம்பச் சின்ன விஷயம்தான்; அதை இப்போது நினைத்தால் கூடச் சிரிப்புத்தான் வருகிறது" என்றாள்.

"சொல்லேன்" என்றாள் கௌரி.

இதற்குள் ரெயில் ஆடுதுறையில் நின்றது. எங்கள் வண்டியில் ஹாட்டும் ஸூட்டுமாக ஒரு மனிதர் ஏறிக்கொண்டார்.

ரெயில் ஆடுதுறையை விட்டுக் கிளம்புகிற சமயம் அவர் கதவுப் பக்கம் நின்றுகொண்டு வெளியே நின்ற யாருக்கோ ஏதோ உத்தரவுகள் கொடுத்துக் கொண்டிருந்தார். யாரோ உத்தியோகஸ்தர் என்று எண்ணினேன்.

சரஸ்வதி சொன்னாள்: "ரொம்பவும் சின்னக் கதைதான். நான் என்ன கதாசிரியையா? இந்த விஷயக் கதையை ஐந்நூறு பக்கத்தில் சொல்வதற்கு?" என்றாள்.

"ஏது? என் புஸ்தகம் எதையோ படித்திருக்கிற மாதிரியே பேசுகிறீர்களே!" என்றேன் நான்.

என்னைப் பார்த்துச் சிரித்தபடியே சரஸ்வதி சொன்னாள்: "சரோஜாவுக்கும் வார்டனுக்கும் சண்டை எப்படித் தொடங்கியது என்று எனக்குச் சரியாக ஞாபகம் இல்லை! ஏதோ ரொம்பவும் சர்வ சாதாரணமான ஒரு வாக்குவாதம். அவ்வளவுதான்."

"உங்களுக்கே மறந்து போய்விட்டது என்றால் மிகவும் சின்ன விஷயமாகத்தான் இருக்கவேண்டும்" என்றேன் நான்.



"இதில் கோபப் படுவதற்கு என்ன இருக்கிறது?" என்றாள் கௌரி.

"எங்களைப் பார்த்தால் எவ்வளவோ தேவலை மற்றவர்களை எல்லாம் விட, என்று உங்களுக்குத் தோன்றுகிறது, இல்லையா?" என்றாள் சாவித்ரி.

உண்மையிலேயே அந்தப் பெண் கெட்டிக்காரிதான். அவள் கண்களிலும் செப்பிலும் வார்த்தைகளிலும்தான் எத்தனை கேலி தொனித்தது!

நான் அந்தக் கேலியைக் கவனியாதவன் போலவே சொன்னேன்: "வெறும் கட்டி கட்டுவதற்காகச் சொல்லவில்லை நான். ஆனால் இப்போதெல்லாம் படித்து விட்டுப் பட்டம் பெற்றுக் கொண்டு வருகிற பெண்களைப் பார்த்த பிறகும் யாருக்காவது பெண் கல்வியை ஆதரிக்கத் தோன்றுமா!"

"தோன்றுதுதான். ஓரளவு வரையில் நீங்கள் சொல்வது உண்மை!" என்று ஒப்புக் கொண்டாள் கௌரி.



சாவித்ரியும் கூட ஒப்புக் கொள்ளத்தான் செய்தாள். "ஆனால் எல்லோரையுமே கல்வி வீணாக்கி விடுகிறதா? ஒரு சிலருக்கு......"

நான் குறுக்கிட்டேன். "நன்று படித்து, நல்ல அறிவு பெற்றவர்கள் ஒரு சிலர் தவிர வேறு யார் இப்படிச் சிந்தனை செய்து பார்க்கிறார்கள்?" என்றேன்.

"ஜர்னலிஸ்ட் ஆக இருக்க வேண்டுமானால் சமயம் பார்த்து முகஸ்துதி செய்யவும் தெரியணும் போலிருக்கு!" என்றாள் சாவித்ரி.

உண்மையிலேயே அவள் கெட்டிக்காரிதான்.

நான் சிரித்து விட்டுப் பேசாமல் இருந்து விட்டேன்.

வண்டி நிருசேகவாம் தாண்டி விட்டது. அந்த இரண்டு பெண்களும் தங்களுக்குள்ளேயே பல பழைய ஞாபகங்களைப் பரிமாறிக் கொள்ளத் தொடங்கினார்கள். அவளைத் தெரியுமா? இவளைத் தெரியுமா? அவள் என்ன செய்கிறாள்? இவள் கல்யாணம் செய்து கொண்டு விட்டாள். அவளுக்கு இரண்டு குழந்தைகள் இருக்கின்றன. இப்படியாக அவர்கள் இருவரும் தங்களுடன் படித்த பல மாணவிகளையும் பற்றிப் பேசிக் கொண்டே வந்தார்கள். எனக்காகப் பேசுவது மாதிரியும் தோன்றவில்லை; ஒன்றிலிருந்து ஒன்று என்று ரொம்பவும் இயற்கையாகப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

நான் கையில் வைத்திருந்த புஸ்தகத்தில் ஈடுபட்டிருப்பவன் போலப் பாசாங்கு செய்ததைத் தவிர, என் கவனமெல்லாம் அவர்கள் பேச்சில்தான் இருந்தது. என்ன சுவாரஸ்யமான பேச்சு! அடடா! எவ்வளவு திவ்ய மணக்கும்! அவர்கள் பேச்சில் எத்தனை கதைகளுக்கு விஷயம் இருந்தது?

"எங்கள் ஹாஸ்டலில் வார்டனுடன் சண்டை

# சரோஜாவின் சவுரி

க. நா. சுப்ரமண்யம்

கும்பகோணத்தில் நான் ரெயிலைப் பிடிக்கும் போது ரெயில் புறப்பட மூன்றே நிமிஷங்கள் தான் இருந்தன. அவசர அவசரமாக டிக்கட் வாங்கிக் கொண்டு இரண்டாம் வகுப்புப் பெட்டியைத் தேடி நடந்தேன்.

முதலில் கண்ணில் பட்ட இரண்டாம் வகுப்பு வண்டியில் இரண்டே இரண்டு பெண்கள் மட்டும் உட்கார்ந்திருந்தார்கள். அடுத்த பெட்டியில் பார்த்தேன். ஸீட்டுக்கு ஐந்து பேர் உட்கார்ந்திருந்தார்கள். ஆடவர் துணையில்லாத பெண்களுடன் பிரயாணம் செய்ய என்னைப் போல் சங்கோஜப்பட்டவர்கள் தான் அன்று ரெயிலேறி இருந்தார்கள் போலும்!

ரெயில்வே கார்டை "இது பெண்கள் வண்டி யில்லையே!" என்று கேட்டுக் கொண்டு அந்தப் பெண்கள் இருவரும் மட்டும் தனித்திருந்த வண்டியில் ஏறிக் கொண்டேன். உடனேயே வண்டியும் கிளம்பிவிட்டது.

கும்பகோணம் ஸ்டேஷனைவிட்டு வண்டி நகர்ந்ததும், அந்தப் பெண்களைக் கவனித்தேன் நான். நான் அந்த வண்டியில் பிரயாணம் செய்வதற்கு அவர்கள் ஆக்ஷேபிக்கவில்லை. இருவரும் படித்தவர்கள் அல்லது படித்துக் கொண்டிருப்பவர்கள் என்று எனக்குத் தோன்றியது. படித்துக் கொண்டிருப்பவர்களாய் இராது என்று எண்ணினேன்—ஏனென்றால் படித்து விட்டு வாழ்க்கையில் புகுந்து விட்டவர்களிடம் மட்டுமே சாதாரணமாகக் காணப்படும் ஒரு அடக்கம் அவர்களிடம் காணப்பட்டது. ஆடை அலங்காரங்களும் சற்று எளியனவாகவே இருந்தன. அவர்கள் தங்களுக்குள் சற்று உரக்கவே பல விஷயங்களைப் பற்றி ஆங்கிலமும் தமிழும் கலந்த ஒரு பாஷையில் பேசிக் கொண்டிருந்தார்கள்.

"எக்ஸ்யூஸ் மீ! நீங்கள் சிதம்பரத்தில் படித்தீர்களா?" என்று அந்தப் பெண்களில் ஒருத்தியைப் பார்த்துக் கேட்டேன்.

இருவரில் பெரியவள் பதில் சொன்னாள். "ஆமாம். இவள் மூன்றாவது வருஷம் அண்ணாமலை சர்வகலாசாலையில் பி. ஏ. படித்தாள். நான் பட்டணத்தில் எம். ஏ. படித்துவிட்டுச் சரித்திர ஆராய்ச்சியில் ஈடுபட்டிருக்கிறேன். என் பெயர் சரஸ்வதி, இவள் பெயர் கௌரி" என்று தொடர்ந்து நான் கேட்டிருக்கக் கூடிய கேள்விகளுக்கும் சேர்த்துப் பதில் அளித்தாள்.

"அப்படியா? தங்களை அறிந்து கொண்டதில் எனக்கு ரொம்பவும் சந்தோஷமே!" என்று நான் உபசாரமாகச் சொன்னேன்.

"சிதம்பரத்தில் உங்களுக்குப் புஸ்தகக் கடை இருக்கிறது, இல்லையா?" என்றாள் சிதம்பரத்தில் மூன்று வருஷங்களுக்குமுன் படித்த மாணவி கௌரி.

"ஆமாம், அதுதான் உங்களை எங்கோ பார்த்த மாதிரி யிருக்கிறதே என்று கேட்டேன்" என்றேன் நான்.

"புஸ்தகக் கடையா?" என்று கேட்டாள் சரஸ்வதி.

"ஆமாம், ஸார் அடிக்கடி தமிழ்ப் பத்திரிகைகளில் கதைகள் கூட எழுதுவார்" என்றாள் கௌரி.

அடாடா! தேவலையே; நம்ம புகழ் இவ்வளவு தூரம் எட்டி யிருக்கிறதே! எனக்குத் திருப்தியாகத்தான் இருந்தது.

"எனக்கும் ஒரு ஜர்னலிஸ்டு ஆகிவிட வேணு மென்றுதான் ஆசை" என்றாள் சரஸ்வதி.

"ரொம்பவும் சிரமமான தொழில்தான். பொறுமையை ரொம்பவும் சோதித்து விடும்" என்றேன்.

"பெண்களுக்குத்தான் பொறுமை சுபாவமாகவே உண்டே?" என்றாள் சரஸ்வதி.

அவள் என்னை ஏதோ கேலி செய்கிற மாதிரித் தோன்றிற்று எனக்கு. நானும் கேலியாகவே சொன்னேன். "இந்த நாட்களில் பெண்களுக்கு எது சுபாவமான குணம், எது சுபாவமல்லாத குணம் என்பதுதான் ஸ்திரமாகவேயில்லையே! பாம்பு சட்டையை விரித்துவிடுகிற மாதிரி, பெண்கள்தான் தங்களுக்குரிய சுபாவத்தை எல்லாம் உரித்து நார வைத்துவிடுகிறார்களே!"

"நீங்கள் பெண் கல்வியை ஆதரிப்பவர் அல்ல என்று தெரிகிறது" என்றாள் கௌரி.

"கோபித்துக் கொள்ளக் கூடாது. உங்களை என்று சொல்லவில்லை நான்."

மாட்டாமல் வீரிட்டு அழத் தொடங்கிட்டான்.

குஞ்சம்மாளுக்குக் கோபம் தாங்கவில்லை. பாட்டியை விட்டுக் குழந்தையை ஆசீர்வதிக்கச் சொல்லலாம் என்று ஆசையுடன் கூப்பிட்ட சமயம் பார்த்து, ராமு அபசகுனம் போலக் குழந்தையை அழவிட்டு விட்டானே! விக்கத்தைப் பார்த்த போது, அவளுடைய கோபம் எல்லை மீறிப் போய் விட்டது.

'' என்னடா அப்படித் தலை போகிற அவசரம்?'' என்று கேட்ட வண்ணம் அவனுடைய கன்னத்தில் பளாரென்று ஓங்கி அறைந்தாள். ராமு அழுது கொண்டே போய் விட்டான்.

பிறந்த நாள் வைபவமெல்லாம் நடந்து, வீடு பழையபடி 'விடா'யிற்று. அன்று குஞ்சம்மாள் துளசியை எடுத்துக் கொண்டு கோயிலுக்குச் சென்றாள். சுற்றிலும் ஒரே இருட்டு. இரண்டு பெண்கள் தன்னைப் பற்றிப் பேசிக் கொண்டு போகவே அவள் உற்றுக் கேட்டாள்.

'' முன்பு ஒரு நாள் விசாலத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோமே, ஞாபகம் இருக்கிறதா? அவளுக்கு நேர் எதிரிடை அந்தக் குஞ்சம்மா,—புதிதாய் வந்திருக்கிறாளே, அவள்தான்! தன் பெண்ணின் பிறந்த நாளன்று பார்த்து, பாவம் அந்தப் பிள்ளையைப் போட்டு எப்படிச் சாத்திவிட்டாள், பார்த்தாயா? கொஞ்சமாவது தயவு தாட்சண்யம் பார்க்க வேண்டாமா?'' என்றாள் ஒருத்தி.

'' அதுதான் நானும் கேட்கிறேன். தன் பெண்ணுக்குக் கொஞ்சம் நெற்றியில் புடைத்துப் போய்விட்டதனால், அவளுக்கு அந்தத் தாயில்லாப் பிள்ளையிடம் வந்த ஆத்திரத்தைப் பார்த்தாயா? தன் பிள்ளையாயிருந்தால், அப்படி அடித்திருப்பாளா?'' என்றாள் மற்றவள்.

இச் சொற்களைக் கேட்டபோது, குஞ்சம்மாவிற்கு முகத்தில் கரியைப் பூசினாற் போல் இருந்தது. ராமு தன்னுடைய சொந்தப் பிள்ளைதான் என்று அவர்களிடம் சொல்லி விடலாமா என்று கூட அவளுக்குத் தோன்றியது. இன்னும் என்ன பேசிக் கொள்கிறார்கள் என்று கவனித்தாள்.

'' அந்தக் குஞ்சம்மா பெரிய ஆசாமிடி! தன் பெண்ணையும், மூத்தாள் பிள்ளையையும் வித்தியாசமாக நடத்துவதை நாம் கண்டு கொள்ள முடியாதபடி, மறைத்து வந்தாள். இப்போது போய்க் கேட்டால் அவள், 'இருவரும் என் குழந்தைகள் தான்; விளையாட்டுக்காகப் போய் சொன்னேன்' என்று சொன்னாலும் சொல்லுவாள். எவ்வளவுதான் அவள் ஒளிவு மறைவு பண்ணினாலும், அவள் இருவரையும் நடத்துகிற தினுசிலிருந்தேதான் மூத்தாள் பிள்ளை; சொந்தப் பெண் என்பது தெரிகிறதே!''

குஞ்சம்மாளுக்கு அங்கு நிற்பதற்கு எப்படிப் பிடிக்கும்? அக்கம் பக்கம் கூடப் பாராமல், 'விர்'ரென்று நடந்து வந்தாள். வீட்டுக்கு வந்ததும், வராததுமாக ரகுவினிடம் அவள் சொன்னது இதுதான் :—'' இந்த ஊரை விட்டு மாற்றல் கேட்டுப் பாருங்கள். கிடைக்குமானால், வேறு எங்கேயாவது போகலாம். எனக்கு இந்த ஊர் ஒத்து வரவில்லை.''

## அதுதான் என் லட்சியம்!



ளும், ஒன்றும் குடி முழுகிப் போய் விடாது. "இவள் நம்மிடம் ராமு மூத்தாள் பிள்ளை யென்று பொய் சொல்லி வந்திருக்கிறாள்" என்று கொஞ்ச நாட்களுக்கு அவர்கள் பேசிக்கொள்ளலாம். அதற்குள் ரகுவை வேறு ஊருக்கு மாற்றி விடுவார்கள். அப்புறம் இந்த ஊர் ஸ்திரீகள் என்ன பேசிக் கொண்டால், எனக்கென்ன?" என்று குஞ்சம்மாள் சொல்லிக் கொண்டாள். அந்தப் பெண்களெல்லோரும் தன்னை வானளாவப் புகழ்ந்து பேச வேண்டும் என்ற ஒரே ஆசைதான் அவள் கண்ணெதிரே நின்றது.

அவள் எதிர்பார்த்தபடி ராமு மூத்தாள் பிள்ளை யென்ற செய்தி எல்லோருக்கும் தெரிந்து விட்டது. "குழந்தைகளுக்குள் வேற்றுமை தலையெடுக்க வேண்டாம் என்பதற்காக நீ எங்களிடமே உண்மையை மறைத்து வந்திருக்கிறாயே! என்ன இருந்தாலும், நீ கெட்டிக்காரியடி அம்மா!" என்று அவளை இதர ஸ்திரீகள் மிகவும் பாராட்டினர்.

அன்று வீடே அமர்க்களப்பட்டது. தெறட்டினார்க் தான் என்றாலும், ரகு ஒன்றையும் குறைக்கவில்லை. குஞ்சம்மாள் ஒரு புது நூல் புடவையைக் கட்டிக் கொண்டு, கூடத்திற்கும் வாசலுக்கும் மாக மிக்க உற்சாகத்துடன் குறுக்கு நெடுக்குமாகப் போய்க் கொண்டிருந்தாள். ரகுவின் அரையிலும் ஒரு புது வேஷ்டி ஏறியிருந்தது. குழந்தைகள் இருவருக்கும் — இருவருக்குமென்ன? துளசியின் பிறந்த நாளா யிருக்கும் போது, அவனுக்கு இல்லாமல் இருக்குமா? ராமுவுக்கும் பட்டுச் சொக்காய், பட்டு வேஷ்டி!

கூட்டம் நிறையத்தான் கூடியிருந்தது. மாடியில் ரகுவின் ஆபீஸ் நண்பர்கள் கும்மாளம் போட்டுக் கொண்டிருந்தனர். கீழே அக்கம் பக்கத்து ஸ்திரீகளின் பேச்சு பிரமாதமாய் இருந்தது. ராமுவுக்குத்தான் அன்று உண்மையில் அதிக வேலை என்று சொல்லவேண்டும். மாடிக்கும் கீழுக்குமாக நூறு நடையாவது நடந்திருப்பான். துளசி மாடியில் இருப்பாள். அப்பொழுது கீழே யாராவது புதிதாக வருவார்கள். உடனே குஞ்சம்மாள் துளசியை அழைத்துக் கொண்டு வரும்படி ராமுவிடம் சொல்வாள். சற்று நேரத்தில், மாடியில் புது அதிதி ஒருவர் வந்திருப்பார். "மிஸ் ரகு எங்கேப்பா?" என்று அவர் அன்பு ததும்ப விசாரிப்பார். உடனே துளசியைத் தூக்கிக்கொண்டு ராமு மேலே செல்வான். இப்படி மாடிக்கு வந்து நின்று கொண்டிருந்த அவனுக்குக் கீழே யிருந்து குரல் வந்தது — "ராமு, துளசியைக்கொண்டுவா. பாட்டி போக வேண்டுமாம்."



ராமு துளசியைத் தூக்கிக் கொண்டு விடுவிடு வென்று இறங்கினான். அவனுடைய அவசரத்தைச் சுவர் கண்டதா, என்ன? குழந்தையின் தலை சுவரில் பலமாக மோதிக்கொண்டது. துளசியின் நெற்றியில் கீழ்க் கோடி மேலைப் புடைத்துக் கொண்டு விட்டது. 'வீல்' 'வீல்' என்று குழந்தை வலி பொறுக்க

"இந்தக் காலத்தில் அவள் தவறிப் பிறந்த ஒரு உத்தமி" என்று ஒருத்தி முத்தாய்ப்பு வைத்தாற் போல் முடித்தாள்.

குஞ்சம்மாளுக்கு இதெல்லாம் கேட்பதற்கு வேடிக்கையாக இருந்தது. "அடே அப்பா, ரொம்ப சுலபமாக 'உத்தமி' என்று பட்டம் பெற்று விட்டாளே! நல்ல பெயர் எடுப்பது மிக மிகக் கஷ்டம் என்று சொல்வார்கள். அவளோ சாதாரணப் பெயர் அல்ல, 'உத்தமி' என்றே பெயர் வாங்கி விட்டாளே! இதில் என்ன பிரமாத அதிசயம் இருக்கிறது? நான் கூடத்தான் உத்தமி என்ற இலேசில் பட்டம் பெற்று விடலாம். நானும் அவருக்கு இளையாளாக வாழ்க்கைப் பட்டவள்தானே? என் மூத்தாளும் தன் குழந்தை யொன்றை எனக்கு வைத்து விட்டுப் போயிருந்தாளானால், நான் அதை அன்புடன் வளர்க்க மாட்டேனா? இதில் உத்தம குணத்திற்கு என்ன இருக்கிறது?"

தன் மூத்தாள் தனக்கு ஒரு குழந்தையையும் வைத்து விட்டுப் போகவில்லையே என்று குஞ்சம்மாளுக்கு வருத்தமாய் இருந்தது. மூத்தாள் மகன் இருந்தால், அவனைக் கொண்டு, தான் 'உத்தமி' என்ற பெயர் எடுத்து விடலாமே என்று அவளுக்கு ஆசையாக இருந்தது. அவர்களெல்லாரும் தன்னை வாயாரப் புகழும்படிச் செய்ய வேண்டும் என்று குஞ்சம்மாளுடைய மனம் துடியாய்த் துடித்தது.

அவளுக்கு ஒரே ஒரு யோசனை தோன்றியது. அவளுக்கு இரண்டு குழந்தைகள் இருந்தார்கள். மூத்தவன் ராமுவுக்கு ஏழு அல்லது எட்டு வயதிருக்கும். அடுத்தவன் துளசி அவனுக்கு இன்னும் ஐந்து வயது நிரம்பவில்லை. ராமுவை மூத்தாளுடைய பிள்ளை யென்று ஒரு பொய்யைச் சொல்லி வைத்து விட்டால், அப்புறம் கோயிலில் எவளுக்கோ கிடைத்த பெயரும் புகழும் தனக்கும் கிடைக்கும் என்று குஞ்சம்மாள் தீர்மானித்தாள்.

அவளுக்குச் சூழ்நிலையும் சாதகமாக அமைந்திருந்தது. அவள் இளையாள் என்பது முன்னமேயே அநேகருக்குத் தெரிந்திருக்கும். "ராமு மூத்தாளுடைய பிள்ளை என்று



இதுவரை நீ சொன்னதே இல்லையே! உன் பிள்ளை யென்று தானே சொல்லி வந்திருக்கிறாய்?" என்று எவளாவது கேட்டால், 'ஆமாம், இப்பொழுது வாய் தவறி வந்துவிட்டது அவனை மூத்தாளுடைய பிள்ளை யென்று சொல்லிக் குழந்தைகளைப் பிரித்து வைக்கக் கூடாது. 'மூத்தாள் பிள்ளை' 'என் பெண்' என்று அந்தக் குழந்தைகளுக்கு வித்தியாசம் தெரிய வேண்டா மென்று தான், நான் இதை மறைத்து வருகிறேன். உங்களுக்குக் கூடச் சொல்லி வைக்கிறேன். அவர்கள் எதிரே இதைப் பற்றிப் பேச வேண்டாம்" என்று சாமர்த்தியமாகப் பதில் சொல்லி விடலாம். உண்மை எது என்பது குஞ்சம்மாளுடைய பிறந்தகத்தார்களுக்குத் தானே தெரியும்? சொந்தக்காரர்களிடமும், தன் ஊர்ப் பெண்களிடமும் இந்தப் பொய்யைச் சொல்ல முடியாது. ஏனெனில் ராமுவைப் பிரசவிக்கப் போனது, வந்தது எல்லாம் அவர்களுக்குத் தெரியுமல்லவா? அப்படித் தவறி ஒரு கால் குட்டு வெளிப்பட்டு விட்டா

# மூத்தாள் மகன்

ர. வேங்கடரத்னம்

சுவாமி புறப்பாடு ஆரம்பமாகிக் கீழண்டைப் பிராகாரத்தில் வந்து கொண்டிருந்தது. அங்கு ஏகப்பட்ட கூட்டமாய் இருக்கும் என்று நினைத்து அநேகர் தெற்குப் பிராகாரத்தில் நின்று காத்துக்கொண்டு இருந்தனர். குஞ்சம்மாளுக்குத் தெரிந்த தெருப் பெண்கள் பலர் அங்கு கூடியிருந்தனர். அவளை அறியாமலேயே அவளுடைய கால்கள் அவளை அங்கு இழுத்துச் சென்றன.

அவர்கள் எல்லோரும் எதைப் பற்றியோ மிகத் தீவிரமாகப் பேசிக்கொண்டிருந்தனர். ஆகையால் அவர்களில் யாரும் குஞ்சம்மாளைக் கவனிக்கவே இல்லை. குஞ்சம்மாள் தானாக அவர்களுக்குப் பக்கத்தில் போய் நின்றாள். 'உண்மையாகவே ஏதோ பெரிய விஷயத்தைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருக்கிறார்கள்; இல்லாவிட்டால் நான் பக்கத்தில் வந்து நிற்பதுகூடத் தெரியாமல் இவர்கள் பேசிக்கொண்டே இருப்பார்களா?' என்று அவள் தன்னைச் சமாதானப் படுத்திக் கொண்டாள்.

'என்ன விஷயம்?' என்று விசாரித்து, அவர்களது சம்பாஷணையில் தானாகச் சேர்ந்து கொள்வதற்கும் அவளுக்குச் சங்கோசமாய் இருந்தது. என்ன இருந்தாலும், ஏழெட்டு மாதச் சிநேகம்தானே? அந்த ஊர் தாலுகாக் கச்சேரி ஹெட் கிளார்க்காக அவளுடைய கணவன் மாற்றலாகி வந்து இன்னும் சரியாக எட்டுமாதம்கூட ஆகவில்லை. அவர்கள் எல்லாரும் ரொம்பக்காலத்துச் சிநேகிதம் கொண்டவர்கள். சிறு வயதிலிருந்தே ஒன்றாய் ஆடிப்பாடிக் குதித்து விளையாடிப் பெரியவர்களானவர்கள். அவர்களுக்குச் சரிசமதையாக அந்தக் கோஷ்டியில் குஞ்சம்மாள் இருப்பது சாத்தியமா? அவர்களில் பலர் அந்த ஊரிலேயே ஸ்திரமாக இருப்பவர்கள். ஒருத்தியின் அகமுடையான் செட்டியார் மளிகையில் கணக்கு எழுதுகிறான் என்றால், இன்னொருத்தியின் புருஷன் இதே ஊரில் முப்பது வருஷமாக முனிசிபல் ஆபீஸில் குமாஸ்தாவாக இருப்பவன். இந்தமாதிரி ஒவ்வொருவருக்கும் வேலை.

குஞ்சம்மாளுடைய புருஷனுக்கு குறிப்பாக ஒரு ஊர் என்று கிடையாது. சர்க்கார் எங்கெங்கெல்லாம் அவனை மாற்றுகிறார்களோ, அத்தனையும் அவனுடைய ஊர்தான். இந் நிலைமையில், அவள் தன் வாயைத் திறவாமல் அவர்களுடைய பேச்சுக்குக் காது கொடுத்தவாறு நின்றாள்.

"அவளைப்போன்ற ஸ்திரீயை நான் இதுவரை பார்த்ததே இல்லை. கொஞ்சம்கூடப் பட்சபாதமென்பதையே அவளிடத்தில் நான் கண்டது இல்லை. இரண்டையும் இரண்டு கண்ணாகத்தான் வைத்துப் பாதுகாக்கிறாள். கொஞ்சம்கூட வித்தியாசமே பாராட்டுவதில்லை" என்று சொல்லி ஒருத்தி நிறுத்தினாள்.

உடனே அடுத்தவள் ஆரம்பித்து விட்டாள். "அதுதான் எனக்கும் அதிசயமாய் இருக்கிறது. இந்தக் காலத்தில் அப்படிப்பட்டவள் ஒருத்தி இருப்பது ரொம்ப அபூர்வம்."

குஞ்சம்மாளுக்கு ஒன்றுமே புரியவில்லை. அவர்கள் பேசிக்கொண்ட அதிசயமான விஷயம் என்னவாக இருக்கும் என்று யோசித்தாள்.— இரண்டையும் இரண்டு கண்ணாய்த்தான் பாவிக்கிறாளாம்! இரண்டு என்ன? இரண்டு புலியா, அல்லது சிறுத்தையா என்று அவளுக்குப் புலப்படவில்லை. மீண்டும் பேச்சு தொடர்ந்தது.

"எவ்வளவோ பத்திரிகைகளெல்லாம் படிக்கிறோமே, கதைகளில்கூட இப்படிப்பட்டவள் எவளும் வருவதில்லை. மூத்தாள் வைத்து விட்டுப்போன பிள்ளையை இளையாள் வந்து படுத்துவதாக வாசிக்கிறோமே யொழிய, மாதிரிக்குக்கூட நல்லவள் என்று இளையாளாக வருபவளை யாரும் சொல்வதில்லை. இவள் அதிசயப் பிரகிருதிதான்!"

"ஆமாம், கோபித்துக் கொள்வதென்றால், தன் பிள்ளையைத்தான் திட்டுகிறாள். ஆனால் ஒருநாள்கூட அவள் தன் மூத்தாள் பிள்ளையை ஒரு வார்த்தை கோபமாகச் சொன்னதாக நான் கேள்விப்பட்டதில்லை. தன் குழந்தையைவிட மூத்தாள் மகனை எவ்வளவோ சீரும் சிறப்புமாகத்தான் வளர்க்கிறாள்."

"அதுதான் நான் சொல்கிறேனே,— அவள் ஒரு விசித்திரமான மனுஷி. எங்கேயாவது மூத்தாள் வயிற்றுப் பிள்ளையை இளையாள் வந்து இவ்வளவு அன்பாகக் கவனித்துக் கொள்வதாக நீ கேள்விப்பட்டிருக்கிறாயா?"

"என்னைக் கேட்டால், அவளை 'எக்ஸிபிஷ'னில் தான் கொண்டு போய் வைக்க வேண்டும். அவளைப் பார்த்தாவது, திருந்த வேண்டியவர்கள் திருந்தலாம்."

# படித்துப் பார்!

## மூன்றாவது இளவரசன்

ஒரு அரசனுக்குச் சந்தேகம் உண்டாகிறது. மூன்று கேள்விகளுக்கு விடைகள் தெரியாமல் திண்டாடுகிறான். கடைசியில், அவனுடைய கடைசிப் புதல்வன் எவ்வளவோ கஷ்டப்பட்டு அதைக் கண்டுபிடிக்கிறான். அதைக் கண்டு பிடிப்பதற்காகத்தான் அடேயப்பா, அவன் எங்கெல்லாம் போய் எவ்வளவு சிரமப்படுகிறான்!

## குமரித் தீவு

இதுவும் ஒரு வீர ராஜகுமாரன் கதை. கடல் கடந்து, வெகு தூரத்துக்கு அப்பால் இருந்த ஒரு தீவை அவன் அடைகிறான். அங்கு வீரச்செயல் புரிந்து, அந்நாட்டு இளவரசியையும் மணந்துகொண்டு வெற்றி முழக்கத்துடன் சொந்த நாட்டுக்குத் திரும்பி வருகிறான்.

## சாரநாத்

பௌத்த புண்ணிய க்ஷேத்திரங்களில் ஒன்று சாரநாத். அதன் பெருமையை விளக்கி எழுதப்பட்ட ஒரு சிறு பிரயாணக் கட்டுரை இந்நூல்.

இந்த மூன்றும் சிறுவர்களுக்காக எழுதப் பட்டவை. முதல் இரண்டு புத்தகங்களையும் எழுதியவர்: நாரா நாச்சியப்பன்; மூன்றாவது புத்தகத்தை எழுதியவர்: அரு. வீரப்பன். ஒவ்வொன்றின் விலையும் அணா இரண்டேதான். பிரசுரம்: கலை பிரசுரம், ராமநகர், தேவகோட்டை.

## உயிரோவியம்

கல்லூரி மாணவி கற்பகத்துக்கு நடராஜன் தமிழ்ப்பாடம் சொல்லித் தருகிறான். பாடம் படித்த கற்பகம் அவன் இதயத் துடிப்பையும் படிக்கிறாள். ஒருவரையொருவர் அறியாமல் மெய்யன்பு கொள்ளுகின்றனர். கற்பகத்தின் தந்தை அவளைச் சந்திரசேகரனுக்கு மணமுடித்துக் கொடுக்கிறார். மணம் முடிந்த பிறகு "என் உயிருக்கு என்றும் நீங்கள் உரியவர். ஆனால் இந்த உடலுக்கு அவர் உரியவர்" என்று கூறிக் கற்பகம் நடராஜனின் மண மயக்கத்தைத் தணிக்கிறாள். இதை மறைவிருந்து கேட்ட சந்திரசேகரன் பிரமிக்கிறான். நடராஜனிடம் அவனுக்குள்ள மதிப்பு பன்மடங்கு அதிகரிக்கிறது. கற்பகம் நடராஜனின் உள்ளக் கோவிலில் உயிரோவியமாகத் திகழ்கிறாள்.

இந்நாடகத்தில் ஆசிரியர் வாழ்க்கைச் சிக்கலை அவிழ அம்பலப்படுத்துகிறார். காதல் ஒரு புறம், சமூகக் கட்டுப்பாடு ஒரு புறம்; பெற்றோர்பாலுள்ள நன்றியுணர்ச்சி ஒரு புறம், சமுதாய ஒழுக்குக்காகவும் குடும்ப கௌரவத்துக்காகவும் தன் வாழ்க்கையைத் தியாகம் செய்யும் துணிவு ஒரு புறம்; -இப்படி அலை மோதும் வாழ்க்கைப் போராட்டத்தில் ஓர் உயிரோவியத்தைச் சித்திரித்திருக்கிறார் ஆசிரியர் நாரண-துரைக் கண்ணன்; பிரசுரம்; ஜீவோதயம் பிரசுரம், சௌராஷ்டிர நகரம், சென்னை 24. விலை ரூ. 2—0—0.



தகப்பனார்:—என்னிடம் ஐந்து மாம்பழங்கள் இருக்கின்றன. இரண்டை உன் அண்ணனுக்குக் கொடுக்கிறேன். ஒன்றை உன் தங்கைக்குக் கொடுக்கிறேன். பாக்கி என்னிடம் எவ்வளவு இருக்கும்?

பையன்:—ஒன்றுகூட இராது.

தகப்பனார்:—அது எப்படி?

பையன்:—பாக்கி இருக்கும் இரண்டையும் நான் எடுத்துக் கொண்டு விடுவேனே!

தைக்கு எப்படித் தெரிந்தது என்பது எனக்கு விளங்கவில்லையே" என்றான். இதற்கு பானு பதில் கூறினாள்:

"இவ்வளவுதானே! அதை நான் சொல்லுகிறேன். நீங்கள் கடைசியாகப் புறப்படும் பொழுது ஒரு கிழவியை என்னிடம் கொண்டு வந்துவிட்டீர்களே, ஞாபகம் இருக்கிறதா? அவள் தனக்கு ஏதோ நோய் என்று பாசாங்கு செய்தாளே! அவள்தான் உங்கள் தந்தையிடம் நமது கலியாண விஷயத்தைப் பற்றிக் கூறினாள். அவள் ஒரு மந்திரக்காரி. உங்கள் நிலையை அறிந்துவர உங்கள் தந்தையால் அனுப்பப்பட்டவள். ஆனால் உங்கள் கவலைக்குக் காரணம் வேறு ஏதோ இருக்கிறது. உங்கள் தந்தை ஏதோ அதிசயப் பொருள் வேண்டுமென்று கேட்டிருக்கிறார். அதை என்னால் கொண்டு வந்து தரமுடியுமோ என்று சந்தேகப் படுகிறீர்கள். உங்கள் மீது எவ்வளவு அன்பு நான் வைத்திருக்கிறேன் என்பதை இன்னும் நீங்கள் உணரவில்லை. நீங்கள் விரும்புவது எதுவாயிருந்தாலும் அதை நிறைவேற்றி வைக்கக் காத்திருக்கிறேன்."

கிடைக்கக் கூடாத பொருளைப் பற்றி எப்படிக் கேட்பது என்று அஹமத் முதலில் சற்றுத் தயங்கினான். ஆனால் தன் மனைவி வற்புறுத்தவே தன் தந்தை விரும்புவது என்ன என்பதைக் கூறினான். (தொடரும்)

### பாகம் எவ்வளவு?

சங்கரநாதனுக்கு முறையே ராமு, கோபு, சோமு, சீனு, ரகு என்று ஐந்து பிள்ளைகள் இருந்தார்கள். ராமு எல்லோரையும் விடச் சின்னவன்; ரகு எல்லோரையும்விடப் பெரியவன். தீபாவளிச் செலவுக்காக அவர்களுடைய தகப்பனார் அவர்களுக்கு மொத்தம் ரூ. 30 கொடுத்தார். ஆனால் பிரித்துக் கொடுக்கும் பொழுது, சின்னவனுக்குக் குறைவாகவும் பெரியவனுக்கு அதிகமாகவும் வயதுக் கிரமப்படி கொடுத்தார்.

ராமு, கோபு இருவரிடமும் இருந்தது ரூ. 6
கோபு, சோமு இருவரிடமும் இருந்தது ரூ. 10
சோமு, சீனு இருவரிடமும் இருந்தது ரூ. 14
சீனு, ரகு இருவரிடமும் இருந்தது ரூ. 18

அப்படியானால் தனித் தனியாக ஒவ்வொருவரிடமும் எவ்வளவு இருக்கும்? விடை அடுத்த இதழில்.

## சரியான அடி!

முதலாவது உலக மகா யுத்தம் நடந்து கொண்டிருந்தபோது, பிரிட்டிஷ் பிரதம மந்திரியாக இருந்தவர் லாய்ட் ஜார்ஜ். அவர் ஒரு பெரிய ராஜதந்திரி. சொந்த முயற்சியாலும் உழைப்பாலும் உன்னத நிலைமைக்கு வந்தவர். ஒரு முறை அவர் ஒரு கூட்டத்தில் பேசிக் கொண்டிருந்தார். அப்போது, அவருடைய அரசியல் எதிரிகளில் ஒருவர் அவரை அவமதிக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் அவரை நோக்கி, "மிஸ்டர் லாய்ட் ஜார்ஜ்! உங்களுடைய தகப்பனார் கழுதை வண்டிதானே ஓட்டிக்கொண்டிருந்தார்?" என்று கூட்டத்தின் மத்தியில் எழுந்து கேட்டார்.



அதைக் கேட்டதும் கூட்டத்தில் இருந்தவர்கள் அனைவரும் 'கொல்' என்று சிரித்து விட்டனர். ஆனால் லாயிட் ஜார்ஜ் சிறிதும் வெட்கப்பட இல்லை. சற்று நேரம் அமைதியாக யோசித்து விட்டு அவர் கூறியதாவது: "சபையோர்களே, கேள்வி கேட்டதில் யாதொரு விதமான தவறும் இல்லை. சரியான கேள்விதான். என் தகப்பனார் கழுதை வண்டிதான் ஓட்டிக்கொண்டு இருந்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. ஆனால் நாங்கள் அந்த வண்டியை விற்று வெகு காலமாகி விட்டது. கழுதையின் கதி என்னவாச்சு என்பது எங்களுக்குத் தெரியாது. ஆனால் அது இன்னும் உயிரோடிருக்கிறது என்பதை இப்போதுதான் தெரிந்து கொண்டேன்!"

அதைக் கேட்டதும், கூட்டத்தில் ஒரே கரகோஷமும் சிரிப்பும் உண்டாயிற்று. கேள்வி கேட்ட ஆசாமி வெட்கத்தால் தலைகுனிந்தார். —அக்ஷயம்.

அவன் முடிவு செய்ததற்கு மறுநாள் அஹமத் இளவரசன் தன் தந்தையிடம் விடை பெற்றுச் செல்ல வந்தான். தன் மகனைப் பார்த்துச் சுல்தான் கூறினான்:—



“என் அருமை மகனே! உனக்கு வாய்த்திருக்கும் அதிர்ஷ்டத்தை எனக்குத் தெரிவிக்காமல் இருந்தது பற்றி எனக்கு வருத்தம்தான். ஆனால் ஒரு தேவமாது உனக்கு மனைவியாக வந்திருப்பதும், அவள் மூலம் நீ ஏராளமான பொருளும், புகழும் பெற்றிருப்பதையும் அறிந்து ஆனந்த மடைகிறேன். நான் எவ்வளவோ சக்தி வாய்ந்த அரசனாயிருந்தாலும் உனக்கு இவ்வளவு உயர்ந்த பதவி கிடைக்கும்படி என்னால் செய்திருக்க முடியாது. என்னால் அளிக்க முடியாததை நீ அடைந்தது பற்றி நான் மகிழ்ச்சி அடைகிறேன். எனினும் இவ்வளவு கீர்த்தி பெற்ற பிறகும் என்னிடத்தில் நீ என்றும்போல் பிரியமாயிருக்கிறாய் என்பதை உலகம் அறிய வேண்டும். உன் விசுவாசத்தை நிரூபிப்பதற்காக நீ ஒரு காரியம் செய்யவேண்டும் என நான் விரும்புகிறேன். மிகவும் விலை பெற்ற ஒரு வஸ்து எனக்குத் தேவையாக இருக்கிறது. அதை நீ அடைவது பிரமாதம் அல்ல. உன்னுடைய மனைவி உன்னிடம் உண்மையாகவே ஆசையுள்ளவளாயிருந்தால் நான் கேட்கும் வஸ்துவை எப்படியாவது அவள் உனக்கு வரவழைத்துத் தருவாள். எனக்கு ஒரு கூடாரம் வேண்டும். அந்தக் கூடாரம் ஒரு மனிதன் கையில் ஏந்திப் பிடிப்பதற்குத் தகுந்ததாக இருக்கவேண்டும். ஆனால் நான் விரும்பினால் என்னுடைய குதிரை, ஒட்டகை மனிதப் படை எல்லாம் அதனுள் அடங்கும்படி விரியும் சக்தியுடையதாகயிருக்க வேண்டும்.”

தன் தந்தை சொன்னதைக் கேட்டதும் அஹமத் திகைத்து விட்டான். இந்தக் காரியத்தை எப்படிச் சாதிப்பது என்று கவலை கொண்டான். தன் மனைவி தன்னிடம் அன்பாக இருக்கிறாள் என்பதை அவன் அறிவான். ஆனால் அவள் சக்தி எவ்வளவு, இந்தக் காரியம் அவளால் ஆகுமா - என்பது அவனுக்குத் தெரியாது. மேலும், சக்தி இருந்தாலும் தன் தந்தை கேட்பதைத் தருவதற்கு அவள் இஷ்டப்படுவாளா என்பதும் அவனுக்குத் தெரியாது. தன் மனதில் என்ன சந்தேகம் இருந்தாலும் அதைத் தன் தந்தை அறிவதை அவன் விரும்பவில்லை. ஆகையால் அவன் தந்தையிடம் கூறினான்:

“தந்தையே! தாங்கள் கேட்டதைப் பற்றி என் மனைவியிடம் தெரிவிக்கிறேன். ஆனால் நிச்சயம் கிடைக்கும் என்று வாக்களிக்க நான் விரும்பவில்லை. ஒன்று மட்டும் கூறுகிறேன். உங்கள் ஆசையை நிறைவேற்ற முடியாவிட்டால், இனி தங்கள் முன் தலை காட்ட மாட்டேன்.”

இவ்வாறு கூறிவிட்டு, தான் திட்டமிட்டிருந்ததற்கு முன்னதாகவே தன் தந்தையின் அரண்மனையை விட்டு அஹமத் புறப்பட்டு விட்டான். தனது மனைவியின் மாளிகைக்குத் திரும்பியவுடன், கவலை நிறைந்த முகத்துடன் ஒரு ஆசனத்தில் சாய்ந்து கொண்டான். இளவரசன் முகவாட்டமாயிருப்பதை வேலையாட்கள் கண்டு கவலையுடன் தங்கள் ராணியிடம் தெரிவித்தனர்.

தன் கணவனின் நிலை அறிந்த ராணி பானு ஓடோடியும் வந்தாள். கவலையின் காரணம் என்ன வென்று கேட்டாள். தனக்கு ஒருவிதமான கவலையும் இல்லை என்று இளவரசன் கூறினான். ஆனால் பானுவுக்கு திருப்தி ஏற்படவில்லை. இனிய மொழிகள் கூறி கடைசியில் தன் மனதில் இருப்பதை இளவரசன் கூறும்படி செய்தாள்.

உடனே அஹமத் “அருமை பானு! நமக்குக் கலியாணம் ஆனது என் தந்

வற்றை யெல்லாம் விரிவாக விளக்கினன். இந்த அபாயத்தை எப்படித் தவிர்ப்பது என்று யோசனை கூறும்படி அவர்களைக் கேட்டான்.

சுல்தானின் மந்திரிகளுக்கு ஏற்கெனவே அஹமத் இளவரசனிடம் அளவு கடந்த பொறாமை. இந்தச் சந்தர்ப்பத்தை உபயோகித்துக் கொண்டு, எப்படியாவது அவனை மாய்த்து விடுவதென்று முடிவு செய்தனர். உடனே சுல்தானிடம் கூறினர்: "பிரபோ, நம் அதிர்ஷ்ட வசத்தின் விளைவாக தற்சமயம் அஹமத் இளவரசர் நமது அரண்மனையிலேயே இருக்கிறார். அவரை உடனே பிடித்துச் சிறைப்படுத்த உத்தரவிடுங்கள்."

கிழவிக்கு இந்த யோசனை பிடிக்கவில்லை. அவள் சுல்தானை நோக்கிக் கூறினள்: "அரசே! மன்னிக்க வேண்டும். தங்களுடைய மந்திரிகள் கூறிய யோசனை தவருனது. அஹமத் இளவரசரை பலாத்காரமாகச் சிறைப்படுத்தினல் அது நமக்கு நன்மையன்று. அதுமட்டுமல்ல. அது மிகவும் முட்டாள்தனமான காரியமுமாகும். அவருடன் வந்திருப்பவர்கள் யாவரும் மந்திர சக்தி வாய்ந்தவர்கள். இளவரசரைச் சிறைப்படுத்தினல் அவர்கள் உடனே ராணியிடம் போய் நடந்ததைச் சொல்லி விடுவார்கள். அவளுக்கு உண்மை தெரிந்தால் தங்கள்மீது கோபம் கொண்டு பழி வாங்கிவிடுவாள். அஹமதிற்குத் தீங்கு விளைவித்தால் உங்களுக்கே அதிகத் தீமை சம்பவிக்கும். தேவமாதர்கள் சாதாரணப்பெண்களைவிடச் சக்தி வாய்ந்தவர்கள். ஆகையால், நான் ஒரு யோசனை கூறுகிறேன். அஹமத் இளவரசர் வரும்போதெல்லாம் ஏதாவது அதிசயப் பொருளையோ, விலை உயர்ந்த நகையையோ கொண்டுவரச் சொல்லுங்கள். தங்கள் விருப்பத்தை எப்படி நிறைவேற்றுவது என்று இளவரசர் கேட்டால், தேவமாதின் உதவி இருக்கையில் எல்லாம் எளிதில் நிறைவேறும் எனக் கூறுங்கள். இளவரசரும் நீங்கள் சொல்லுகிறபடியே நடப்பார். அவரை என்ன கொண்டு வரச் சொல்லலாம் என்பதற்கு நான் ஒரு யோசனை கூறுகிறேன். நம்முடைய படை அனைத்தும் அடங்கக்கூடிய முறையில் ஒரு சிறு கூடாரம் வேண்டும் என்று கேளுங்கள். தன் மதிப்பையும் தன் மனைவியின் மதிப்பையும் காப்பாற்றிக் கொள்வதற்காக இதைக் கட்டாயம் கொண்டு வருவார். இதைக் கொண்டு வந்தவுடன் இதையும்விட அதிசயமான மற்றொரு பொருளைக் கொண்டு வரும்படி சொல்லுங்கள். இப்படிக் கேட்டுக்கொண்டே போனல் அவர் மனைவி சக்தி இழந்து விடுவாள். அப்புறம் நீங்கள் சொல்வதைச் செய்ய முடியாமல் போய்விடும். அந்த நிலையில் இளவரசர் உங்கள் முன் வர வெட்கப்படுவார். அப்புறம் அவர் தன் மனைவியுடன் எங்காவது கண்காணு இடத்தில் காலத்தைக் கழிப்பார். அவரால் உங்களுக்கு எவ்விதத் தொல்லையும் ஏற்படாது."



இதைக் கேட்ட சுல்தான் கிழவியின் யோசனைப்படியே நடப்பது என்று முடிவு செய்தான். அவ்விதம்

பாப்பா மலர்

# மாய மாளிகை

## 7. தந்தையின் வேண்டுகோள்

விதவிதமான நகைகளையும், நாணயங்களையும், வைர வைடூரியங்களையும் கண்ட கிழவிக்குப் பேச நா எழவில்லை. ஆகையால் மௌனமாக ராணிக்குத் தரையோடு தரையாகத் தலை வணங்கினாள்.

பானு அவளைப் பட்சமாகவே வரவேற்றாள். அவள் புறப்படுமுன் அரண்மனையின் பிற பாகங்களையும் அவளுக்குக் காட்டும்படி தன் தோழிகளுக்குக் கட்டளையிட்டாள். அவளை முதலில் வரவேற்ற இரண்டு தேவமாதர்கள் மீண்டும் அவளை அழைத்துச் சென்று அரண்மனையைச் சுற்றிக் காட்டினர்.

கிழவிக்கு அரண்மனையின் பல பாகங்களையும் பார்க்கப் பார்க்க ஒரே ஆச்சரியமாயிருந்தது. ஒரு அறை முந்திய அறையைவிட ஆடம்பரமாயிருந்தது. ஒரு மண்டபத்தைவிட அடுத்த மண்டபம் இன்னும் பல மடங்கு பிரகாசமாக இருந்தது. பானுவின் அரண்மனையைப் பார்த்துக் கிழவி வியந்து கொண்டிருப்பதைப் பார்த்த தோழிகள், "பாட்டி! நீங்கள் இதுவரை பார்த்ததெல்லாம் எங்கள் ராணியின் சொத்துக்களில் ஒரு சிறு பகுதி. அவளுக்கு இன்னும் எத்தனையோ அரண்மனைகள், எவ்வளவோ ஆடை ஆபரணங்கள் இருக்கின்றன. அவற்றைக் கணக்கிடவே முடியாது" என்று கூறினர். இதைக் கேட்ட கிழவிக்கு ஆச்சரியம்மேலும் அதிகரித்தது.

எல்லா அறைகளையும் காட்டிவிட்டுத் தோழிகள் கிழவியை இரும்புக் கதவைத் தாண்டி வெளியே கொண்டுவந்து விட்டனர். வெளியே வந்தவுடன் அந்தக் கதவு இருக்குமிடத்தை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள விரும்பினாள். அந்தக் கதவின் அடையாளம் தெரிந்தால்தானே மறுபடியும் அங்கு வந்து தன் மாய வேலையைச் செய்யலாம்? ஆனால் கதவு அவள் கண்ணுக்குத் தென்படவில்லை.

இந்த ஒரு குறை இருந்தாலுட கிழவிக்குத் தன் பிரயாணத்தைப் பொறுத்தவரை திருப்திதான். மிக்க சந்தோஷத்துடன் அவள் குகையிலிருந்து புறப்பட்டு சுல்தான் முன் போய்ச் சேர்ந்தாள். அவனிடம் நடந்தவற்றையெல்லாம் ஒன்றுவிடாமல் சொன்னாள். கிழவி சொன்ன விவகாரங்களைக் கேட்ட சுல்தானுக்கு தேவமாது பானுவிடம் பொறாமை ஏற்பட்டது. ஏனெனில் இந்தியாவின் சுல்தானாயிருக்கும் தன்னைவிட, ஒரு பெண் இவ்வளவு பணம் படைத்தவளாயிருப்பதா என்றுதான் பொறாமை. மந்திரக் கிழவி, பானுவின் அழகு, ஆடம்பரம் முதலியவற்றைப் பற்றிச் சொன்னதுடன் நிற்கவில்லை. "அரசே, அவள் பணக்காரியாயிருந்தால் நமக்கென்ன? அதைப் பற்றிக் கவலைப்படவில்லை. அவள் நமது இளவரசரை மயக்கித் தன் மாய வலையில் சிக்க வைத்துவிட்டால் என்ன செய்வது என்றுதான் கவலையடைகிறேன். அதுவும் போகட்டும் என்று விட்டுவிட்டாலும், இளவரசருக்கு உதவி புரிந்து உங்கள் சிம்மாசனத்தைப் பறித்து அவனையே இந்தியாவின் சுல்தானாக முடிசூட்டிவிட்டால்என் செய்வது என்று கலங்குகிறேன்" எனக் கூறிவிட்டுத் தன் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

கிழவி சொன்னதைக் கேட்டு சுல்தானுக்கு பயம் உண்டாகிவிட்டது. தனது சிம்மாசனம் பறிபோய்விடும் என்றே எண்ண ஆரம்பித்து விட்டான். உடனே அவன் மந்திரிகளையும் ஆலோசகர்களையும் வரவழைத்தான். அவர்களிடம் மந்திரவாதிக் கிழவி கூறிய

ரா.நா

யிருக்கும் நிபுணர்கள் கையாண்டு விதர்சனப் படுத்துவதுதான். இளம் வித்வான்கள் இந்த வித எடுத்துக் காட்டலுக்கு ஏற்றவர்களா? ஏற்றவர்களாயிருந்தால் அவர்களை இளம் வித்வான்கள் என்று சொல்லலாமா? சென்ற வருஷம் ஆலத்தூர் சகோதரர்கள் பாலக்காடு மணி ஐயர் மிருதங்கத்துடன் சில பல்லவிகளைத் திருஷ்டாந்தப் படுத்திக் காட்டினார்கள். அத்தகைய கச்சேரிகள் "டெமான்ஸ்ட்ரேஷன்" (Demonstration) கச்சேரிகள் என்று கூறப்படலாம். இந்த வருஷம் நடந்த இளம் வித்வான்களுடைய கச்சேரிகள் தங்கள் யோக்யதையை வெளிப்படுத்தும் பொருட்டு செய்த நிரூபணக் கச்சேரிகள்தான்.

மேலும் இவைகள் நடந்த சமயம், இடம்-இவை இரண்டும் அந்த வித்வான்களுக்கு மிகவும் அசௌகரியமானவை. சில நாள் சங்கீதப் போட்டி நடந்தவுடன் அதே மேடையில் நடந்தது. அந்த சமயம் சபையில் ஏற்படும் ஆரவாரமும், அமர்க்களமும், ஜனங்கள் போவதும் வருவதும், அந்த இளம் வித்வான்களின் உற்சாகத்தை வேரோடு அறுத்துவிடும் என்பதில் சந்தேகம் இல்லை. இப்படி அவர்களைக் கஷ்டப் படுத்துவதைவிட இந்தக் கச்சேரிகளை நிறுத்தி விடுவதே மேல்.

### அதிகாரம் உண்டா?

தினந்தோறும் காலையில் வித்வத் சபையில் நடந்த சங்கீத சர்ச்சைகள், உபந்யாசங்கள், பிரதர்சனங்கள் முதலவை வழக்கம் போலவே இருந்தன. சர்ச்சைகளின் தீர்மானங்கள் எவ்வளவு தூரம் அனுபவ சாத்தியமாயிருந்தன, பிரயோகத்தில் கொண்டுவரப் பட்டன என்பதுதான் புரியவில்லை. முன்னமே பல கூட்டங்களில் அலசி அலசி ஆராய்ச்சி செய்யப்பட்டிருந்த உசேனி, பந்துவராளி முதலிய ராகங்கள் மறுபடியும் சர்ச்சைக்குள்ளாயின. பலன் என்ன? இத்தகைய தீர்மானங்கள் எல்லா சங்கீத வித்வான்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்டு அனுஷ்டிக்கப்பட்டு வருகின்றனவா, அனுஷ்டிக்கும்படி செய்ய ஏதாவது முறைகள் கையாளப்படுகின்றனவா, அல்லது அப்படி அனுஷ்டிக்கும்படி வித்வான்களைக் கட்டாயப்படுத்த அகாடமிக்குத் திறமுண்டா, அதிகாரமுண்டா என்கிற கேள்விகள் ஏற்படுவது நியாயமேயாம்.

ஸ்ரீ வி. எஸ். ஐயர் கருநிர்ணயமாகச் செய்த பிரசங்கம் எவ்வளவு தூரம் அனுஷ்டானத்துக்கு யுக்தமாயிருந்தது என்பது தெரியவில்லை. அவர் கூறின விஷயங்கள் கௌரவமானவை. மிகச் சிரமம் எடுத்துக்கொண்டு பற்பல ஆராய்ச்சிகள் செய்ததின் பலனை எடுத்துக் காட்டினார். ஆனால் வட இந்திய சங்கீதத்தைப் பற்றிக் கூறினது ஒப்புக்கொள்ளத் தக்கதாக இல்லை. ஸ்ரீ ரதன்ஜங்கர் செய்த பிரசங்கம் மிகவும் ருசிகரமானதாகவும் ஞானமும் அனுபவமும் நிறைந்தும் இருந்தது. மஞ்சக்குடி ராமச்சந்திர பாகவதர் காலையில் ஒரு மழுங்கிப் போன சில தியாகராஜ கீர்த்தனங்களின் உண்மையான சொரூபத்தைச் சம்பிரதாயமான ரீதியில் பாடிக் காட்டினது அழகாக இருந்தது. தேவகோட்டை நாராயணய்யங்கார் வீணையில் கமக வழிகளை வாசித்துக் காட்டியதும், ரவிசங்கர் ஸிதார் வாசித்ததும், டைகர் வரதாச்சாரியார் மந்தரஸ்தாயி சஞ்சாரங்களின் அழகை நிரூபித்துக் காட்டியதும் மெச்சத் தகுந்தவை. சில சமயங்களில் அபிப்பிராய பேதங்கள் ஏற்படும்போது வார்த்தைகள் கொஞ்சம் காரசாரமாக இருந்தது இயற்கைதான். மந்தர ஸ்தாயி சஞ்சாரத்தைப் பற்றி விமர்சனம் நடந்த சமயம், அதில் பங்கெடுத்துக் கொண்ட ஒரு வித்வான் கொஞ்சம் அளவு கடந்து வார்த்தைகள் உபயோகப் படுத்தினதாகக் கேட்போர்களுக்குத் தோன்றிற்று. ஆனால் தலைமை வகித்த முடிகொண்டான் வேங்கடராமய்யர் அவர்கள் அவ்வப்போது பேசின விஷயங்களும், விவாதத்தில் பங்கெடுத்துக் கொண்டவர்களுடைய அபிப்பிராயங்களை வியாக்கியானப் படுத்தியதும், விவாதங்களை சமரசப் படுத்தியதும் பாராட்டத் தக்கவையாயிருந்தன.

---

## அழுதாயோ, ஜாக்கிரதை!



குறத்தி (தன் அழுகிற குழந்தையைப் பார்த்து):—இனிமேல் நீ அழுதாயானால் உன்னை அவரிடம் பிடித்துக் கொடுத்துவிடுவேன்!

# சங்கீத சர்ச்சைகள்

இசை ரசிகன்

இந்தக் காலத்தில் சங்கீதம் மிகவும் விரிவடைந்து சர்வ ஜனங்களும் கையாளவோ அனுபவிக்கவோ கூடிய முறையில் பரவி யிருப்பது ஒருவிதத்தில் சந்தோஷப் படக்கூடியதா யிருந்தாலும், சங்கீதக் கலையின் உண்மையான பாதுகாப்புக்கு அது தடையாக நிற்கிறது. அக்கலையின் முக்கிய நோக்கங்கள் மாசு அடையும்படி நேருகிறது. மேற்படி கலைக்கு உள்ள பெருமையும் மகிமையும் குறைந்து வருகின்றன என்பதை இந்த வருஷத்து சங்கீத அகாடமி விழாத் தலைவர் ஸ்ரீ முடிகொண்டான் வெங்கட்ராமய்யர் வற்புறுத்திச் சொன்னார். சங்கீதத்தின் லக்ஷண லக்ஷ்யங்களை அதை அப்பியசித்து, குருகுலவாசம் செய்து நன்றாக உழைத்துச் சரியான வித்வத்தைச் சம்பாதித்தவர்கள் மாத்திரமே நிர்ணயிக்க முடியும்; அரைகுறையாக நுனிப்புல் மேய்ந்தவர்களும், ரசிக்க மட்டும் அறிந்தவர்களும், சங்கீத விவாதங்களில் இறங்குவது நல்லதல்ல. ஒரு மின்சார யந்திர அமைப்பைப் பற்றித் தீர்மானம் பண்ணுவது மின்சார சாஸ்திர நிபுணர்களா, அல்லது மின்சார விளக்கையும் விசிறியையும் மற்ற மின்சார விசித்திரங்களையும் அனுபவிக்கும் பொது ஜனங்களா? இது கை தூக்கி ஓட்டு எடுத்துத் தீர்மானிக்கப்படக் கூடிய விஷயம் அல்லவே!

மேலும் சங்கீத ஞானம் ஒருவருக்கு ஏற்படுவது பாடம் கற்றுக் கொள்வதால் மட்டுமல்ல. கற்றுக் கொள்வதால் நமக்கு ஏற்படும் ஞானம் ஒரு பாகம்தான்; பல பாகங்கள் சேர்ந்தால்தான் சரியான சங்கீத ஞானம் ஏற்படுகிறது. பிறவி வாசனை ஒரு முக்கியமான பாகம்; கற்றுக் கொள்வது மற்றொரு பாகம்; கேட்டுக் கேட்டு வருவது இன்னொரு பாகம்; நல்ல குருவோடு பழகி அதிலிருந்து அடையும் பக்குவம் வேறொரு பாகம்; பிறருக்குச் சொல்லிக் கொடுத்து அதிலிருந்து கிடைக்கும் பரிபக்குவம் ஒரு பாகம்; இவ்வளவையும் தன் அனுபவத்திற்குக் கொண்டு வந்து அதிலிருந்து கிடைக்கும் மெருகு வேறொரு பாகம். இவ்வளவும் சேர்ந்துதான் சரியான சங்கீத ஞானம் ஏற்படும்.

சமீப காலத்தில் வித்யாலயங்களிலும், கல்லூரிகளிலும் சர்வகலாசாலைப் பரீக்ஷைகளிலும் பாட விஷயப்பட்டிகைகளிலும் (Syllabus) சங்கீத இலக்ஷணம் (Theory) என்ற பெயருடன் கிளம்பி, அளவிற்கு அதிகம் வியாபித்து, கலைச் சங்கீதத்தையே தன் ஆட்சியில் உட்படுத்தப் பார்க்கிற நிலைமையைக் குறித்து ஸ்ரீ முடிகொண்டான் நன்றாகச் சக்தியுடன் பேசியிருக்கிறார். இது மிகவும் முக்கியமான விஷயம். சங்கீதக் கலையின் உயிரையே பாதிக்கக் கூடிய ஒரு காரியம். வித்வான்களும் ரசிகர்களும் ஒன்று சேர்ந்து ஆலோசித்துத் தீர்மானிக்க வேண்டிய விஷயம். சங்கீதம் ஒரு அற்புதமான கலை. அந்தக் கலை முறைகளை எடுத்துச் சொல்வது சாஸ்திரம். பாஷை முக்கியமா, பாஷையைப்பற்றி விஸ்தாரணம் செய்யும் இலக்கணம் முக்கியமா? இந்த விஷயத்தில் சந்தேகத்திற்கு இடமில்லை; அபிப்பிராய பேதமும் இருக்க முடியாது. ஆனால் சமீப காலத்தில் இந்த சங்கீத லக்ஷணம் (Theory) என்கிற சாஸ்திரம் பூதம்போலக் கிளம்பி இருக்கிறது. கலையையே விழுங்கி விடுமோ என்று பயப்படும் நிலையில்கூட அது பலப்பட்டு வருகிறது. லக்ஷணத்தைக் குறைகூறுவதாக நினைக்கக்கூடாது. லக்ஷண ஞானம் வேண்டியது அவசியம். ஆனால் அதற்கு ஒரு அளவு உண்டு. அதற்கு மிஞ்சினால் கலையின் கலைத் தன்மையைப் பாதிக்க நேரிடலாம். உண்மையான லக்ஷணம் லக்ஷ்யத்தோடு கலந்தே நிற்கும். அப்பியாசத்தோடு கூடின லக்ஷண ஞானமே உயர்ந்தது; அதுவே உபயோகமானது.

### திருஷ்டாந்தக் கச்சேரிகள்

சங்கீத அகாடமி விழாவில் முந்தின வருஷங்களில் மாலை 3 மணி முதல் 5 மணி வரைக்கும் இளம் வித்வான்களுடைய கச்சேரிகள், பெரிய கச்சேரிகள் நடக்கும் மேடையிலேயே நடப்பது வழக்கம். அதைப்பற்றிப் பல புகார்கள் இருந்து வந்தன. இந்த வருஷம் அந்தக் கச்சேரிகளை டிக்கட் வாங்காமல் கேட்கும்படியாக சங்கீத சர்ச்சைகள் நடக்கும் இடத்திலேயே ஒரு மணி நேரத்திற்குத் "திருஷ்டாந்தக் கச்சேரிகள்" என்கிற புதுப் பெயருடன் ஏற்பாடு பண்ணியிருந்தார்கள். இப்படிச் செய்ததின் நோக்கம் நன்றாக விளங்கவில்லை. திருஷ்டாந்தக் கச்சேரிகள் என்பது பலர் அறியமுடியாத நுட்பமான கடினமான விஷயங்களை அந்த விஷயத்தில் பண்டிதர்களா

சௌந்தரியவதி டி. ஆர். ரஜினி தன் சருமத்தை வசீகரமாக வைத்துக்கொள்ள லக்ஸ் டாய்லட் சோப்பை விரும்புகிறார்.




"நான் எப்பொழுதும் லக்ஸ் டாய்லட் சோப்பை உபயோகிக்கிறேன். இந்த சுலபமான முறையினால் தான் என் சருமத்தை மாசற்றதாகவும் மழமழப்பாகவும் வைத்துக்கொள்ளுகிறேன். மேலும் இந்த சோப் மனோரஞ்சகமான பரிமளமுடையது." என்று கூறுகிறார் இந்த அழகிய நட்சத்திரம்.

☆ இனிய மணத்துடன் கூடிய இந்த வெண்மையானதும் சுத்தமானதுமான சோப் உங்கள் சருமத்தையும் வசீகரமாக செய்யும்!

**சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்**

LTS. 234-172 TM

அல்லவா! ஆகவே உனக்கு ஆச்சரியம் ஏற்படுவது இயல்பு தான். ஆனால் ஒரு விஷயம் மட்டும் நீ நன்றாக நினைவு வைத்துக் கொள்ள வேண்டும். பலவீனத்தின் மீது வெற்றி கொள்ளுவது தான் மனிதனாய்ப் பிறந்த ஒவ்வொருவனின் கடமையும் ஆகும். இன்று கடவுளாகப் பார்த்து, 'வாழ்க்கையிலே மேன்மையுற வேண்டும் என்றால், உலகத்து ஆசாபாசங்களுடன் போரிட வேண்டும்' என்னும் ஒரு மாபெரும் உண்மையை எனக்குப் போதித்திருக்கிறார். நான் செயலில் இறங்கப் போகிறேன். ஆகவேதான் நான் சித்திரலேகாவுக்குத் தீக்ஷை அளிப்பது என்ற முடிவுக்கு வந்திருக்கிறேன்" என்றான்.



விசாலதேவன் குறுநகை புரிந்து, "குருதேவர் சொல்வது மிகவும் நியாயமான வார்த்தை. இன்று இராத்திரிக்குள் குடிசை ஒன்று தயார் செய்துவிட வேண்டியதுதானே?" என்று கேட்டான்.

விசாலதேவனின் குறுநகையும், குத்தலான கேள்வியும் குமாரகிரியின் உள்ளத்திலே கோபக் கனலைக் கிளறி விட்டன. அவன் உடல் 'வெட வெட' வென்று நடுங்கத் தொடங்கியது. அவன் விரைப்பாக நிமிர்ந்து நின்று, "வேண்டாம், வேண்டாம்! குடிசை தயார் செய்ய வேண்டாம். சித்திரலேகா என்னுடைய குடிசையிலேயே தங்குவாள். விசாலதேவா! என் பலவீனத்தைப் பரிகாசம் பண்ண உனக்கு இவ்வளவு நெஞ்சு அழுத்தமா? நான் உன்குரு. உன்னைக் காட்டிலும் உயர்ந்தவன் என்பதை மறந்து விடாதே! என்று சீறி விழுந்தான்.

குமாரகிரியின் ரௌத்திராகாரமான உருவத்தைக் கண்டு விசாலதேவன் நடுநடுங்கிப் போய் விட்டான். உடனே குமாரகிரியின் காலடிகளில் விழுந்து, "குருதேவா! சிறியேனுடைய பிழையைப் பொறுத்தருள வேண்டும். குடிசை தயார்செய்யப் போக எனக்கு அனுமதி கொடுங்கள்" என்றான்.

"வேண்டாம், வேண்டாம். நீ சித்திரலேகாவுக் காகக் குடிசை தயார் செய்ய வேண்டாம். போ! என் முன் நில்லாதே! எனக்குச் சந்நியாசவ்ரதத்துக்கு நேரமாகி விட்டது" என்று சிம்மம்போல கர்ஜித்தான் குமாரகிரி.

விசாலதேவன் வெலவெலத்துப் போய் அங்கிருந்து வெளியேறினான். குமாரகிரி சித்திரலேகாவிடம் "நடந்ததெல்லாம் கனவு போலத் தோன்றுகிறது. என்னாலேயே இவற்றையெல்லாம் நம்ப முடியவில்லை. ஆயினும் நடக்க வேண்டியது என்னவோ நடந்து விட்டது. நினைத்தால் பயமாகத்தானிருக்கிறது. சிற்சில சமயம் அச்சம் மீறி மயிர்க்கூச்சல் கூட எடுக்கிறது. தீயுடன் விளையாடப் புறப்பட்டிருப்பது போன்ற உணர்ச்சி எழுந்து உள்ளத்தை அழுத்துகிறது" என்றான்.

சித்திரலேகாவின் வதனத்திலே இனிய இளநகை தாண்டவமாடியது. "ஸ்வாமி! என்னிடம் தாங்கள் பயப்படுவானேன்? நான் புலியா, கரடியா, கடித்து விழுங்கி விடுவதற்கு? உங்களுடைய சாதனையிலோ தவத்திலோ உங்களுக்கு இடையூறாக ஒரு நாளும் நிற்க மாட்டேன் என்று உங்களுக்கு உறுதிமொழி அளிக்கிறேன். நான் தங்களைக் காதலிக்கிறேன். காதல் என்பதற்கு சர்வபரித்தியாகம் என்பதுதான் பொருள். தாங்கள் சுகம் என்று எண்ணுவதையே நானும் சுகம் என்று எண்ணுவேன். தங்களுக்குக்கிட்டும் இன்பத்தையே நானும் என் இன்பமாக பாவிப்பேன்!" என்றாள்.

"சரி! அப்படியே ஆகட்டும்" என்று சொல்லி விட்டுக் குமாரகிரி தன் ஆசனத்தில் அமர்ந்தான். "நீ உனக்காக ஒரு தர்ப்பாசனம் தயார் செய்து கொள்ள வேண்டும். தர்ப்பை வேண்டுமென்றால், நீ விசாலதேவனிடம் கேட்டு வாங்கிக் கொள்ளலாம். எனக்குச் சந்நியாகாலத் துச் சமாதிக்கு நேரம் ஆகிவிட்டது!" என்று சொல்லிக் குமாரகிரி கண்களை மூடிக்கொண்டான்.

(தொடரும்)

என்னால் தடுக்கவும் முடியாது. காதலுக்குப் பதில் காதலை எதிர்பார்ப்பது நியாயமாயிருக்கலாம். காதலுக்குப் பதில் காதல் கிடைக்கும் என்று நம்புவதிலும் தவறில்லை. ஆனால் அந்த நம்பிக்கையை வெற்றியுறும் படி செய்வதற்காகப் பாடுபடுவதுதான் நியாயமற்ற செயலாகும்" என்றான் குமாரகிரி.

இதைக் கேட்டதும் சித்திரலேகாவின் முகம் சுண்டிவிட்டது. ஆனால் அடுத்த கணமே அவள் தன்னைச் சமாளித்துக் கொண்டு விட்டாள். அவள் கம்பீரமான—மிகவும் கம்பீரமான குரலில், "தாங்கள் சொல்வது ரொம்ப நியாயமான வார்த்தை, யோகி! இந்தத்தடவையும் நான் சொன்னது தான் தவறு. நான் காதலின் தணியாத வேட்கையைத் தணித்துக் கொள்வதற்காக இங்கே வந்திருக்கிறேன். நான் காதலிக்கும் தெய்வத்தின் பாத தூளிகளைச் சிரமேற் கொள்ளுவதற்காகவும் கண்களில் ஒற்றிக் கொள்வதற்காகவும் இங்கே வந்திருக் கிறேன். உங்களுடன் இரண்டறக் கலந்து உங்களிலேயே லயித்து விடுவதற்காக நான் இங்கே வந்திருக்கிறேன். ஸேவை, பக்தி, தன்னைத்தானே மறந்து விடுதல், தணியாத வேட்கை இவையெல்லாம் காதலின் அறிகுறிகள். நான் இந்த உண்மையை, நம்பிக்கையும் கடமை யுணர்ச்சியும் உள்ளத்தில் குடிகொண்டிருந்த அந்தக் காலத்திலேயே என் விவாகத்தின் பொழுதே கண்டேன். ஆனால் அந்தக் காலத்தில் நான் அந்த உண்மையின் வாஸ்தவமான மகத்துவத்தைச் சரியாகப் புரிந்துகொள்ள முடியவில்லை. இப்பொழுது மறுபடியும் அந்த உண்மையைக் கண்டேன். ஆகவே தான் தங்களை நாடி வந்திருக்கிறேன்" என்றாள்.

இதைக் கேட்டதும் குமாரகிரி கம்பீரமாகி விட்டான். 'காமத்தை விலக்கிக் காதல் கொள்ளுவது சாத்தியமான காரியம்தானா?' என்னும் கேள்வி அவனுடைய மனதிலே எழுந்தது. அவனுடைய மகத்தான சாதனையும் நம்பிக்கையும் "இல்லை" என்று பதில் அளித்தன. ஆனால் அவனுடைய உள்ளம் மட்டும், "அட முட்டாள்! உண்மைக் காதலில் காமத்துக்கோ, வேட்கைக்கோ இடம் ஏது?" என்று இடித்துக் கூறியது.

"எனக்கு யோசிக்கச் சிறிது அவகாசம் கொடு, அம்மா! மிகச் சிக்கலான பிரச்னை இது!" என்றான் குமாரகிரி.

சித்திரலேகா குமாரகிரியின் கால்களைப் பிடித்துக் கொண்டாள். "தங்களுக்கு அவகாசம் கொடுக்க எனக்கு அவகாசம் இல்லையே, ஸ்வாமி! ஆகவேண்டியது அனைத்தும் ஆகிவிட்டதே! நான் மிக மிக முன்னேறி விட்டேன். இனி பின் நோக்கிச் செல்லுவது நடக்காத காரியம். நான் இந்தக் குடிசையில் தங்கி விடுவதென்ற திட்டமான தீர்மானத்துடன் வந்துவிட்டேன். இங்கிருந்து திரும்பிப் போகும் நோக்கம் என் உள்ளத்தில் கடுகளவு கூட இல்லை" என்றாள்.

அதற்கு ஒன்றும் பதில் சொல்லாமல் குமாரகிரி, "நீ என்ன, நடந்தே வந்திருக்கிறாயா?" என்று கேட்டான்.

"இல்லை, ரதத்தில்தான் வந்தேன்"

"ரதம் எங்கே யிருக்கிறது?"

"ராஜ வீதிக் கருகிலே அதை விட்டு விட்டு வந்தேன். இவ்வளவு நேரம் அது வீட்டுக்குத் திரும்பிக்கூடப் போயிருக்கும்" என்றாள் சித்திரலேகா.

குமாரகிரி அண்ணாந்து மேலே பார்த்தான். "கடவுளே! இதுவும் உன் திருவிளையாடலா? உன் சித்தம் இதுதானா? அவனன்றி ஒரு அணுவும் அசையாது என்று சொல்லுவது பொய் ஆகுமா? உன் திருவுள்ளப்படியே நடக்கட்டும்" என்று மனதுக்குள் முணுமுணுத்துக் கொண்டான். அடுத்த கணம் காலடிகளில் விழுந்து கிடந்த சித்திரலேகாவைத் தூக்கி நிறுத்தி, "நல்லது, அம்மா! அப்படியானால் நான் உனக்குத் தீக்ஷை அளிக்கிறேன். உலகத்தில் உள்ள ஆசாபாசங்களுடன் நான் போரிடவேண்டும் என்பதுதான் பகவானின் திருவுள்ளம் போலும். அவ்வாறே ஆகட்டும்" என்று சொல்லிவிட்டுக் குமாரகிரி விசால தேவனுக்குக் குரல் கொடுத்தான்.

விசாலதேவன் வந்ததும் குமாரகிரி அவனைப் பார்த்து, "விசாலதேவா! சித்திரலேகாவுக்காக நீ ஒரு குடிசை தயார் செய்ய வேண்டும்" என்று ஆக்ஞாபித்தான்.

விசாலதேவனின் வதனத்திலே வியப்புணர்ச்சி தோன்றியது. அவனுக்குத்தான் சகல விஷயங்களும் முன்பே தெரியுமே! அவன் சித்திரலேகாவை வணங்கி, "அம்மா, உன் வரவு நல்வரவு ஆகுக!" என்றான். பிறகு குமாரகிரியைப் பொருள் புதைந்த பார்வையுடன் ஒரு முறை நோக்கினான்.

விசாலதேவன் பார்த்த அந்தப் பார்வையின் நோக்கத்தைக் குமாரகிரி புரிந்து கொண்டான் "அப்பா, குழந்தாய்! உனக்கு ஆச்சரியமாயிருக்கிறதா? நீ என் பலவீனத்தை ஒரு முறை பார்த்துவிட்டாய்

மான காரியம்!" என்று பிதற்றினான். உடனே அவன் எழுந்தான். எழுந்து பித்தனைப் போல குடிசைக்குள்ளேயே இங்கும் அங்கும் நடக்கத் தொடங்கினான். சித்திரலேகா சிலையாகச் சமைந்து மௌனமே உருவாக உட்கார்ந்திருந்தாள். குமாரகிரி சிறிது நேரம் கழித்து மறுபடியும், "நடனராணி! உண்மையைச் சொல்லு. நான் உன்னிடம் பொய் சொல்லவில்லை. உன்னிடம் ஒன்று கேட்கிறேன். கேட்கும் கேள்விக்கு உண்மையை ஒளிக்காமல் பதில் சொல்லு. நீ எதற்காக இங்கே வந்திருக்கிறாய்? உண்மையாகவே நீ மெய்யறிவு பெற வேண்டும் என்று விரும்புகிறாயா? உண்மையிலேயே நீ சுகபோகங்களை உதறித் தள்ளத்தான் வந்திருக்கிறாயா? உன்னால் இது முடியக் கூடிய காரியமா? சொல்லு! ஏன் மௌனமாயிருக்கிறாய்? ஏன் வாய் திறக்கவில்லை! இப்படி வாய் அடைத்து உட்கார்ந்திருப்பானேன்?" என்று கேள்விக்கு மேல் கேள்வி கேட்டுக் கொண்டே போனான். அதை நினைத்தும் அவனுக்கே சிரிப்பு வந்து விட்டது. "நீ உண்மையைச் சொல்ல விரும்பவில்லை. உன்னால் பொய்யும் சொல்ல முடியவில்லை. நீ இப்படி மௌனம் சாதித்துச் சிலை போல உட்கார்ந்திருப்பதே 'இல்லை' என்பதற்கு அடையாளம்தான்!" என்றான்.

சித்திரலேகாவின் மோக நித்திரை கலைந்தது. அவள் குமாரகிரியை எதிர்த்துப் பார்த்தாள். அவளுடைய கண்கள் குமாரகிரியின் கண்களுடன் கலந்தன. அவள் மிகவும் அடக்கமான குரலில், "யோகி! தன் வெற்றி தோல்வியைச் சிறிதும் பொருட்படுத்தாமல், தாங்கள் ஒரு தடவை உண்மையைச் சொல்லியிருக்கிறீர்கள். நானும் உங்களிடம் உண்மையையே சொல்லுவேன். நான் உங்களுடன் காதல் புரிவதற்காக வந்திருக்கிறேன்" என்றாள்.

"என் ஊகம் அப்படியானால் பொய்க்கவில்லை. நல்லது. நீ காதல் புரியவா வந்திருக்கிறாய்? அதுவும் என்னையா? யாரையும் எப்பொழுதுமே காதலித்தறியாத என்னைக் காதலிக்க வந்திருக்கிறாயா? 'காதல் என்றால் என்ன விலை?' என்று கேட்கும் என்னையா காதலிக்க வந்திருக்கிறாய்? பேஷ்! பேஷ்! நீ சொல்வது மிகவும் விசித்திரமாக இருக்கிறதே! சரி, அது போகட்டும். நான் உன்னிடம் இன்னொரு விஷயம் கேட்கிறேன். காதல் புரிவது என்றாயே! அது எப்படிப் புரிய வேண்டும்? நான் இதுவரை மனிதனிடத்தில் காதல் தானாகவே உற்பத்தியாகிறது என்றல்லவா எண்ணி ஏமாந்து விட்டேன்! மனிதன் கச்சையை கட்டிக் கொண்டு காதல் புரியக் கிளம்புகிறான். அப்புறம் காதலிக்கிறான் என்ற விஷயமெல்லாம் எனக்குத் தெரியாமற் போய் விட்டதே!" என்று சொல்லிக் குமாரகிரி சிரித்தான். அவன் சிரித்த அந்தச் சிரிப்பிலேதான் என்ன வறட்சி! என்ன கேலி! அதைக் கண்ணுற்ற சித்திரலேகா திகைத்துத் துணுக்குற்று விட்டாள்.

"யோகி! நான் சொன்னது சரியல்ல. நான் என் உள்ளத்து உணர்ச்சிகளைச் சரியாக வெளியிட முடியவில்லை. நான் உங்களைக் காதலிக்கிறேன். இந்த விஷயம் உங்களுக்குத் தெரியும். அதுவும் வெகு நாட்களாகவே உங்களுக்குத் தெரியும். நீங்களும் என்னைக் காதலிக்க வேண்டும் என்பதற்காகத் தான் நான் உங்களை நாடி வந்திருக்கிறேன். இப்பொழுது நான் என் அந்தரங்க அபிப்பிராயத்தைச் சரியாக வெளியிட்டு விட்டதாக நினைக்கிறேன்" என்றாள் சித்திரலேகா.

"நீ என்னைக் காதலிக்கிறாய் அல்லவா! அதுவே யதேஷ்டம். நான் இந்த விஷயத்தில் உன்னை ஒருபொழுதும் தடுக்கவில்லை.



தான் இருந்தது. பட்டாடை ஆடைகளை உடுத்தி, ஐசுவரிய கர்வத்தில் பூர்த்து விந விதமான ஆபரணங்கள் அணிந்து மினுக்கி மயக்கும் சித்திரலேகாவின் எழிலுருவத்தைத்தான் அதுவரை குமாரகிரி பார்த்திருந்தான். இன்றுதான் முதன் முதலாக அமைதியே உருவெடுத்த அவளுடைய களை சொட்டும் ரூபலாவண்யத்தைக் கண்டான். சித்திரலேகாவின் வெளிறிய மெலிந்த முகத்தில் சுடர்விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருந்த சாந்தியின் ஒளி அவளுடைய பேராசையைத் திரையிட்டு மறைத்து வைத்திருப்பது போலிருந்தது. மந்திர வசப்பட்டவன்போல் குமாரகிரி சித்திரலேகாவின் எழிலோவிய வெகுநேரம் வரை பருகிக் கொண்டிருந்தான். பிறகு அவன் மெதுவான குரலில், "நடன ராணி!" என்று அன்புடன் அழைத்தான்.

சித்திரலேகா தன் மூடிய கண்களை மெதுவாகத் திறந்து, "குருதேவா! சமாதி கலைந்து எழுந்தாகி விட்டதா, என்ன?" என்று மிகப் பரிவுடன் கேட்டாள்.

"ஆம், எழுந்தாகிவிட்டது. ஏன், நடன ராணி! நீ இங்கே எதற்காக வந்தாய்?"

"குரு தேவரிடம் தீக்ஷை பெறுவதற்காகத்தான் வந்தேன்!"

"உனக்குத் தீக்ஷை அளிக்க என்னால் இயலாது என்று நான் மறுத்துக் கூறியது உனக்கு நினைவு இருக்கலாமே!"

"ஆம், நினைவில் இருக்கிறது. இருந்தாலும் தங்களை நம்பித்தான் வந்திருக்கிறேன். நான் தியாகம் செய்து விட்டேன். இன்று நான் என் ஐசுவர்யம் அனைத்தையும் உதறித் தள்ளிவிட்டு வந்து விட்டேன். எனது என்றிருந்த சகலத்தையும் நான் தியாகம் செய்துவிட்டு இங்கே வந்திருக்கிறேன். ஆனால் நான் என்னும் அகந்தை மட்டும் இன்னும் என்னை விட்டு அகன்று போகவில்லை. அதையும் என்னுடன் கூடவே எடுத்துக் கொண்டுதான் தங்களை நாடி வந்திருக்கிறேன். அந்த அகந்தையைப் போக்க வேண்டியது தங்கள் கடமை, தங்கள் தர்மம்" என்றாள் சித்திரலேகா.

"முடியாது! நடனராணி, முடியாது!" சித்திரலேகாவின் அகன்ற நீண்ட மான் விழிகளுக்கெதிரே குமாரகிரி மிரண்டு போய்விட்டான். "முடியாது, நடன ராணி! முடியாது. இது நடக்கவே நடக்காத காரியம். உனக்குத் தீக்ஷை அளிக்க என்னால் இயலாது" என்று உரக்கக் கத்தினான். அடுத்த கணம் அவன் தன் நிலை மறந்து வெறி பிடித்தவன்போல, "உனக்குத் தீக்ஷை அளிப்பதென்று ஆரம்பித்தால் அது எதில் கொண்டு போய் விடும், தெரியுமா? விழ வேண்டியது தான்! கீழே விழ வேண்டியது தான்! எங்கே? கீழே, கீழே, கீழே, அதப் பாதாளத்தை நோக்கிக் கீழ் விழ வேண்டியதுதான்! எனக்கு உன்னையும் தெரியும், என்னையும் தெரியும். அதுவும் நன்கு தெரியும். உன்னை உயரத் தூக்கி விடுவது மிகவும் கடினமான காரியம்; நான் கீழே வீழ்ந்து விடுவது எவ்வளவோ சுலப





# சித்திரலேகா

ஸ்ரீ பகவதி சரண் வர்மா

மொழிபெயர்ப்பு. ரா.வீ.

பதினாறாம் அத்தியாயம்

## சோதனை

சித்திரலேகா சிங்கார விடுதிக்குச் சென்று முதன் முதலாகத் தான் அணிந்திருந்த ஆபரணங்கள் அனைத்தையும் கழற்றி வைத்தாள். பிறகு குங்கும வர்ணப் பட்டுப் புடவை ஒன்றை எடுத்து உடுத்திக் கொண்டாள். அன்று அவள் தன் தலையைக் கூட வாரிப் பின்னிக் கொள்ளவில்லை. ரதம் அதற்குள் வாசலில் வந்து அவளுக்காகத் தயாராகக் காத்து நின்றது.

சித்திரலேகா பீஜகுப்தனுக்கு ஒரு கடிதம் எழுதினாள். பிறகு பணிப் பெண்ணைக் கூப்பிட்டு, 'நான் சாயந்திரத்திற்குள் திரும்பி வரவில்லையென்றால் இந்தக் கடிதத்தைப் பீஜகுப்தனுக்குக் கொடுத்தனுப்பு' என்று உத்தரவிட்டாள். அதற்குப் பிறகு அவள் தன் குடும்பப் பொறுப்பை, நம்பிக்கைக்குப் பாத்திரமான தன் பணிப்பெண் ஒருத்தியிடம் ஒப்படைத்தாள். அதைக் கண்ட பணிப்பெண்ணுக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. அவள் வியப்பு மிகுதியினால் சித்திரலேகாவையே உற்றுப் பார்க்கலானாள். "ஆச்சரியப் படுகிறாயா, சுநயனா? நான் கொஞ்ச நாட்களுக்கு இந்தச் சுகபோக வாழ்க்கையிலிருந்து விலகியிருக்க விரும்புகிறேன். நான் திரும்பி வருகிறவரை நீதான் இந்தக் குடும்பத்துக்கு எஜமானி. புரிந்ததா?" என்றாள். அதற்கு மேல் அதிகமாக அவள் தன் பணிப் பெண்ணிடம் ஒன்றும் சொல்லவில்லை.

அடுத்த கணமே அவள் 'விர்' ரென்று வாசற்புறம் வந்தாள். தனக்காகக் காத்திருந்த ரதத்தில் ஏறிக்கொண்டு அவள் குமாரகிரியின் குடிசைக்குப் பிரயாணமானாள். ராஜ வீதியைக் கடந்ததும் சித்திரலேகா ரத சாரதியை நோக்கி, "ரதத்தை இங்கேயே நிறுத்திக் கொள். இன்னும் இரண்டு ஜாமத்துக்குள் நான் திரும்பாவிட்டால் நீ ரதத்தைத் திருப்பி ஓட்டிச் சென்று விடலாம். அப்புறம் எனக்காக நீ காத்திருக்க வேண்டாம்" என்று சொன்னாள்.

சித்திரலேகா குமாரகிரியின் குடிசையை அடைந்தபொழுது அவன் தியானத்தில் ஆழ்ந்திருந்தான். சித்திரலேகா அவன் அருகில் அமர்ந்து கொண்டாள். கிட்டத்தட்ட ஒரு ஜாமம் கழிந்த பின்னர்தான் குமாரகிரி சமாதி கலைந்து எழுந்தான். அவன் கண்களைத் திறந்ததும் திறக்காததுமாக எதிரே சித்திரலேகா உட்கார்ந்திருப்பதைக் கவனித்தான். சித்திரலேகா கண்களை மூடிக்கொண்டு ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள். அவளுடைய உடலில் ஒரே ஒரு ஆடை மட்டும்



...... அப்படத்தில் ஸ்ரீ பி. யு. சின்னப்பா
வழக்கம்போகப் பாடி யிருக்கிறார்; ஆடி
யிருக்கிறார்; குதித்துக் குதித்துப்பேசி யிருக்
கிறார்; மத்தளமும் கொட்டி யிருக்கிறார்;
இவ்வளவு மல்லாமல், பாம்பாட்டி வேஷம்
பூண்டு மகுடி ஊதிப் பானுமதியைப் படம்
எடுத்து ஆடவும் செய்திருக்கிறாராம்! மற்
றும் இப்படத்தில் கலைவாணர் என். எஸ்.
கிருஷ்ணனின் ஹாஸ்யக்குதூகலமும் ஸ்ரீமதி
மதுரத்தின் கோலாகலமும் சேர்ந்திருக்கின்
றனவாம். இத்தகைய படம் சென்னைக்கு
எப்போது வரும் என்று ஆவலுடன் எதிர்
பார்க்கப்படுவதில் வியப்பில்லை அல்லவா?

ஸினிமா உலகத்தில் யுகங்கள் நிமிஷங்களைப்போல் ஓடி விடு கின்றன. வட இந்தியாவில் ஒரு காலத்தில் சாந்தா ஆப்தே யின் யுகமா யிருந்தது. பிறகு கன்னன்பாலாவின் யுகம் நடந் தது. தமிழ் நாட்டிலே இக் காலத்துக்கு முன்பு டி. ஆர். ராஜகுமாரியின் யுகம் நிலவி யது; இன்றைக்குப் பானுமதி யின் யுகம் நடைபெறுகிறது. எந்தப் பழைய நட்சத்திரம் போனாலும் சரி, எந்தப் புதிய நட்சத்திரம் வந்தாலும் சரி, ஸ்ரீ பி. யு. சின்னப்பாவின் ஒளி மட்டும் தமிழ் ஸினிமா உலகில் மங்காது பிரகாசித்துக் கொண் டிருப்பதைக் காண்கிறோம். சமீ பத்தில் வெளியாகி யிருக்கும் "ரத்ன குமார்" என்னும் தமிழ்ப்படத்தில் ஸ்ரீமதி பானு மதியும் ஸ்ரீ பி. யு. சின்னப்பா வும் அபாரமாக நடித்திருப்ப தாய்த் தெரிய வருகிறது......



நாடகத்துக்குத் தலைமை வகித்த கவர்னர் பவநகர் மகாராஜா, மராமத்து இலாக்கா மந்திரி கனம் பக்தவத்ஸலம், சுகாதார மந்திரி டாக்டர் ராஜன், சபாநாயகர் கனம் சிவசண்முகம் பிள்ளை முதலியவர்கள் அமர்ந்திருப்பதைப் படத்தில் காணலாம்.

தாய் தடுத்து விடுகிறாள். பொங்கிவரும் கோபத்தை யெல்லாம் தாய் அன்பு காரணமாக அடக்கிக் கொள்கிறான் மனோகரன். அந்த இடங்களில் எல்லாம் மனோகரனாக நடித்த ஸ்ரீ டி. கே. ஷண்முகத்தின் நடிப்பு உச்ச நிலையை அடைகிறது. நாம் நாடகம் பார்க்கிறோம் என்னும் நினைவையே மறந்து விடும்படி செய்து நம்மையும் நாடக நிகழ்ச்சிகளோடு ஐக்கியப்படுத்தி விடுகிறது.

தன்னைக் கொன்று விடும்படி உத்தர விட்ட தன் தந்தையைப் பார்க்கக் கோபாவேசமாக ராஜசபைக்கு வருகிறான் மனோகரன். அப்பொழுது அவனைச் சங்கிலியால் பிணைத்துப் பல சிப்பாய்கள் பிடித்துக் கொண்டிருக்கிறார்கள். மனோகரன் தன் தந்தையுடன் வாதாடிச் சங்கிலியை அறுத்துக் கொண்டு அரசனை நோக்கிப் பாயும் போது மயிர்க்கூச்சல் உண்டாகிறது. அந்தக் காட்சியைத்தான் இந்த இதழ் அட்டையில் மகிழ்ச்சியுடன் வெளியிட்டிருக்கிறோம்.

மேலே வட்டத்தில் இருப்பவர்தான் மனோகரனின் தந்தையான புருஷோத்தம மகாராஜா. தாசி வசந்த சேனையின் வலையில் மயங்கித் தம் தர்மபத்தினி ராணி பத்மாவதியைப் பதினாறு வருஷம் பார்க்காமல் இருந்து விடுகிறார். வழக்கத்துக்கு விரோதமாக ராணி பத்மாவதியுடன் அமர்ந்து ராஜரீகம் செய்ய வேண்டிய சிம்மாசனத்தில் வசந்த சேனையை உட்கார வைத்துக் கொள்கிறார். தம்முடைய மகன் மனோகரனைச் சிரச்சேதம் செய்யும்படி உத்தரவிடுகிறார். இப்படி எவ்வளவோ தகாத காரியங்களைச் செய்துவிட்டுத் தாமும் கஷ்டப்பட்டுக் கடைசியில் தம் தவறை உணர்கிறார். இந்தச் சம்பவங்களை யெல்லாம் உணர்ச்சியுடன் நடித்து சபாஷ் பெறுகிறார் புருஷோத்தம மகாராஜாவாக நடித்த ஸ்ரீ டி. கே. பகவதி. அதிகமாகப் பேச்சை வைத்துக்கொள்ளாமல் முகபாவங்களைக் கொண்டே தம் மன நிலையைத் தெரியும்படி நடிக்கிறார்.

வீரமும் சோகமும் மிளிரும் பல காட்சிகளுக்கிடையே ஹாஸ்யமும் இந்நாடகத்தில் நிறைய இடம் பெற்றிருக்கிறது. வசந்த சேனையின் மகன் வசந்தனாக நடித்த ஸ்ரீ ராமசாமியும், விகடனாக நடித்த ஸ்ரீ சிவதாணுவும் வழக்கம் போல் தம்முடைய குற்றமற்ற ஹாஸ்ய நடிப்பால் சபையில் 'குபீர்' 'குபீர்' என்று சிரிப்பை வரவழைத்துப் பாராட்டுதலைப் பெற்றனர்.

# மனோகரனின் காணிக்கை

பகீரதன்

சென்னைக் கடற்கரையில் கட்டப்போகும் காந்தி மகான் ஞாபகார்த்த ஸ்தூபி நிதிக்குத் தன்னுடைய காணிக்கையாக ரூ. 2,301 அளித்திருக்கிறான் மனோகரன்.

பழந்தமிழ் நாட்டின் ராஜரீகம், தாய் அன்பு, வீரத்தின் சிறப்பு ஆகியவற்றுக்கெல்லாம் ஞாபகார்த்தமாக விளங்கி வருவது "மனோகரன்" என்னும் நாடகம்.

அந்தப் பழம் பெரும் நாடகக் கதையை அற்புதமான முறையில் நடித்துப் புகழடைந்தவர்கள் ஸ்ரீ டி. கே. எஸ். சகோதரர்கள். சென்ற பதினோராந்தேதி யன்று காந்திஜி ஞாபகார்த்த ஸ்தூபிக்காக மனோகரன் நாடகத்தை நடித்து அன்றைய வசூல் தொகை ரூ. 2,301-யும் காந்திஜியின் புனித நிதியில் சேர்த்துப் பெருமையடைந்தார்கள்.

மேற்படி நாடகத்துக்குச் சென்னை கவர்னர் பவநகர் மகாராஜா தலைமை வகித்தார். சுகாதார மந்திரி டாக்டர் ராஜன், மராமத்து இலாகா-மந்திரி கனம் பக்தவத்சலம், காந்தி மகான் ஞாபகார்த்த ஸ்தூபி நிதியின் பொக்கிஷதார் சபாநாயகர் கனம் சிவஷண்முகம் பிள்ளை முதலியவர்களும் இன்னும் பல பிரமுகர்களும் உற்சாகமாக நாடகத்துக்கு வந்திருந்தார்கள். நாடகத்துக்குத் தலைமை தாங்கிய பவநகர் மகாராஜாவை மனோகரனின் தந்தையான புருஷோத்தம மகாராஜா மேடைக்கு அழைத்துச் சென்று மாலை சூட்டி மகிழ்ந்து அன்றைய வசூல் தொகையைப் பக்தியுடன் கொடுத்த காட்சி மறக்க முடியாத காட்சி.

புருஷோத்தம மகாராஜா நிதித் தொகையை பவநகர் மகாராஜாவிடம் கொடுத்தவுடன் பவநகர் மகாராஜா அதை வாங்கி நாடகமேடையிலேயே நிதியின் பொக்கிஷதாரரான கனம் சிவஷண்முகம் பிள்ளையிடம் ஒப்புவித்தார். பிறகு, மகாத்மா ஞாபகார்த்த ஸ்தூபியின் அவசியத்தைப் பற்றிப் பேசினார். "மகாத்மா காந்தி இந்திய மக்களின் இதயங்களில் கோவில் கொண்டிருக்கிறார். ஆனால் அது மட்டும் போதுமா? வாழ்க்கைச் சிக்கல்களில் அகப்பட்டுள்ள நாம் அந்த மகானை மறந்து விடும்போது ஞாபகப்படுத்துவதற்குக் கண்ணால் பார்க்கக்கூடிய ஞாபகச் சின்னமும் அவசியம் வேண்டும். அத்தகைய ஞாபகச் சின்னத்தை ஏற்படுத்துவதற்குச் சென்னைக் கடற்கரை மிகப் பொருத்தமான இடம். காந்தி மகானுடைய புனித அஸ்தியை அஸ்திவாரத்தில் இட்டு, ஸ்தூபி அமைப்பது பொருத்தமான ஞாபகச் சின்னம். அந்தக் கைங்கரியத்துக்கு இந்த நாடகக் கலைஞர்கள் உதவி செய்ய முன்வந்ததை மிகவும் பாராட்டுகிறேன்" என்று பவநகர் மகாராஜா கூறியதைச் சபையோர் பெரிதும் பாராட்டிக் கரகோஷமும் செய்தார்கள்.

நிதி முடிப்பைப் பெற்றுக் கொண்ட சபாநாயகர் சிவசண்முகம் பிள்ளை அவர்களும் மகாத்மா ஞாபகார்த்த ஸ்தூபியின் அவசியத்தைப் பற்றிப் பேசினார்.

"காந்தி மகானுக்கு ஞாபகார்த்த ஸ்தூபி கட்டுவது அவசியமா என்று சிலர் நினைக்கலாம். அதிர்ஷ்ட வசமாக மகாத்மாவுடன் வாழும் பாக்கியம் பெற்ற நமக்கு அது அவசியமில்லை. ஆனால் நம்முடைய சந்ததியாருக்குக் காந்தி மகானின் ஞாபகார்த்தம் மிகவும் அவசியம். உலகமே கண்டு வியக்கும் வண்ணம் நமக்குச் சுதந்திரத்தை வாங்கித் தந்த மகானின் ஞாபகார்த்த நிதிக்குத் தாராளமாய் உதவி செய்யுங்கள்" என்று சபாநாயகர் சபையோரைக் கேட்டுக் கொண்டார். காந்திஜி ஞாபகார்த்த நிதிக்காக இந்த நாடகத்தை நடத்தி நிதி அளித்த ஸ்ரீ டி. கே. எஸ். சகோதரர்களின் நடிப்புத் திறமையைக் கனம் சிவசண்முகம் பிள்ளை பாராட்டிப் பேசிய போது ஜனங்களின் உற்சாகமான ஆரவாரம் கொட்டகை அதிரும்படி செய்து விட்டது. கொட்டகைக்குப் பக்கத்தில் நின்று நாடகத்தை அனுபவிக்க முடியாமல் தொந்தரவு செய்யும் ரயில் இஞ்சின் கூடத் தன்னுடைய அளவில்லாத சந்தோஷத்தை 'வீல்' என்று கத்திக் காண்பித்துக் கொண்டது.

• • •

பகைவர்களை வென்று வெற்றி மாலை சூடிவந்த மனோகரனும் அவன் தாய் ராணி பத்மாவதியும் தாதி வசந்த சேனையின் சூழ்ச்சியால் பல கஷ்டங்களுக்கு உள்ளாகிறார்கள். மரண அபாயங்கள் கூட நேருகின்றன. இவ்வளவு இன்னல்களுக்கும் காரணமான அந்த வசந்த சேனையைக் கொன்று பழி தீர்த்துக் கொள்ளத் துடிதுடிக்கிறான் மனோகரன். வசந்த சேனையை மட்டும் கொல்லக் கூடாது என்று அவன்

ஆகியவர்களும் கைது செய்யப்பட்டார்கள் என்று செய்தி கிடைத்தது.

7ஆ இரவு மகாத்மா ஆசிரமவாசிகளுடன் உற்சாகமாகப் பேசிக் கொண்டிருந்தார். பர்தோலியில் பிரயாணம் செய்ததுபோல் ஆனந்த் தாலுகாவில் 12ஆ பிரயாணம் தொடங்கப் போவதாகத் தெரிவித்தார். பிறகு எல்லாரும் தூங்கப் போனார்கள்.

இரவு 11 மணிக்கு "தந்தி!" "தந்தி!" என்ற கூக்குரல் எல்லாரையும் எழுப்பி விட்டது. காந்தி மகானும் விழித்துக் கொண்டார். இரண்டு தந்திகள் அலகாபாத்திலிருந்து வந்திருந்தன. பண்டித மோதிலால் நேரு, பண்டித ஜவாஹர்லால் நேரு, பண்டித சாமலால் நேரு, ஸ்ரீ ஜார்ஜ் ஜோசப் ஆகியவர்கள் கைது செய்யப்பட்டதாகவும், உடனே மகாத்மாவின் குமாரர் ஸ்ரீ தேவதாஸ் காந்தியை அனுப்ப வேண்டுமென்றும் ஸ்ரீ மகாதேவ தேசாய் தந்தி அடித்திருந்தார்.

இந்த முக்கியமான செய்திக்குப் பிறகு தாக்கம் ஏது? பண்டித மோதிலால் ஐக்கிய மாகாணத்தில் இணையில்லாத செல்வாக்கு வாய்ந்திருந்தவர். அதிகார வர்க்கத்தாரும் அவரிடம் பெருமதிப்பு வைத்திருந்தார்கள். ஆகவே பண்டித மோதிலால் நேருவைக் கைது செய்தது சாதாரண விஷயம் அல்ல. பண்டித மோதிலாலைக் கைது செய்தார்கள் என்றால் பிரிட்டிஷ் சர்க்கார் தீவிர அடக்குமுறையைக் கையாளத் தீர்மானித்து விட்டார்கள் என்றுதான் அர்த்தம்.

ஆகையால், அடுத்தாற்போல் தேசபந்து தாஸையும் கைது செய்யலாம். ஏன்? மகாத்மா காந்தியைக் கைது செய்வதும் சாத்தியமேயாகும்.

இந்த எண்ணங்கள் எல்லாம் மகாத்மாவின் மனதில் மின்னல்போலத் தோன்றின. உடனே காந்திஜி என்ன செய்தார் தெரியுமா? ஸ்ரீ தேவதாஸ் காந்தியை அழைத்து உடனே அலகாபாத்துக்குப் புறப்படச் சொன்னார், பிறகு "யங் இந்தியா"வுக்குக் கட்டுரை எழுத உட்கார்ந்தார். அந்தக் கட்டுரையின் தலைப்பு "அன்பு - பகைமை அல்ல" என்பது. அதிகார வர்க்கத்தின் அடக்குமுறை ஆயுதத்துக்கு நம்முடைய பதில் ஆயுதம் அன்புதானே தவிர, பகைமை அல்ல என்ற கருத்துடன் மகாத்மா "யங் இந்தியா"வுக்குக் கட்டுரை எழுதினார். ஒருவேளை தம்மைக் கைது செய்துவிட்டாலும் இந்தியப் பொதுமக்கள் அன்பு நெறியையே கடைப்பிடிக்க வேண்டும் என்று அதில் குறிப்பாகத் தெரிவித்தார்.

இந்தியா தேசமெங்கும் எல்லா வித அடக்குமுறைச் சட்டங்களையும் அதிகார வர்க்கம் பிரயோகித்தது.

இவ்விதம் ஏற்பட்டுள்ள புதிய நிலைமையில் என்ன செய்வது என்று நாட்டின் எல்லாப் பாகங்களிலிருந்தும் யோசனை கோரி மகாத்மாவுக்குத் தந்திகள் வந்தன.

அதிகார வர்க்கத்தாரின் அடக்கு முறையை எதிர்க்க வேண்டியதுதான் என்று காந்திஜி யோசனை கூறினர். பொதுஜனச் சட்ட மறுப்பு ஆரம்பிக்கும் விஷயம் வேறு; அதிகார வர்க்கத்தின் அடக்கு முறையை எதிர்க்கும் விஷயம் வேறு. முன்னது இந்தியா தேசத்தின் சுதந்திரத்துக்காக; இரண்டாவது ஜீவாதார உரிமையை நிலைநாட்டுவதற்காக. அங்கங்கே அமைதிக்குப் பங்கம் நேரும் என்ற பயம் இல்லாவிட்டால் தனிப்பட்ட தலைவர்களும் தொண்டர்களும் அநியாய உத்திரவுகளை மீறலாம் என்று மகாத்மா தெரிவித்தார். அவ்வளவுதான். தேசமெங்கும் ஒரு புத்துணர்ச்சி ஏற்பட்டது. சில நாளைக்குள் அந்தப் புத்துணர்ச்சி பொங்கிப் பெருகி அலைமோதிப் பரவியது.

பம்பாய்க் கலவரம் காரணமாகப் பர்தோலி இயக்கத்தை மகாத்மா நிறுத்தி வைத்ததால் தேசத்தில் உண்டான மனத் தளர்ச்சி பறந்து போய்விட்டது.

டிசம்பர் மாதம் 6-ம் தேதி காந்தி மகாத்மா பர்தோலியிலிருந்து சபர்மதி ஆசிரமத்துக்கு வந்து சேர்ந்தார். அவர் வந்ததும் லாகூரில் டிசம்பர் 4-ம் தேதி லாலா லஜபதி ராய் கைது செய்யப்பட்ட செய்தி வந்து சேர்ந்தது. லாலாஜியுடன் பண்டித சந்தானம், டாக்டர் கோபி சந்த் ஆகியவர்களும் கைது செய்யப்பட்டதாகத் தெரிந்தது. லாலாஜிக்குப் பதிலாக ஆருப் ஆகா ஸப்தார் பஞ்சாப் மாகாண காங்கிரஸ் கமிட்டி தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டதாகவும், வேலைகள் தொடர்ந்து நடைபெறுவதாகவும் லாகூரிலிருந்து வந்த செய்தி கூறியது. எல்லாவற்றிலும் முக்கியமாக லாகூரில் ஒருவித கலவரமோ, குழப்பமோ ஏற்படவில்லை.

இதைப் பற்றி மகாத்மா தமது சகாக்களிடம் சந்தோஷமாகப் பேசிக் கொண்டிருந்தபோது, லக்ஷ்மணபுரியிலிருந்து ஒரு செய்தி வந்தது. அங்கே பண்டித ஹரகர்நாத மிஸ்ரா, மௌலானா ஸலாமதுல்லா, சௌதரி கலிகுஸ்ஸமான் ஆகியவர்கள் கைதியானார்கள். லக்ஷ்மணபுரியிலும் அமைதி நிலவியது.

மறுநாள் 7உ யன்று கல்கத்தாவில் ஸ்ரீ ஜிதேந்திர லால் பானர்ஜியும், அஸ்ஸாமில் ஸ்ரீ பூக்கர்ன, ஸ்ரீ பர்தோலாய்



"பத்து பேர்தான் நின்றுகொண்டு வரலாம். உமக்கு இடமில்லை."

"பரவாயில்லை. நான் பறந்து கொண்டே வருகிறேன்!"

ஆனால் சபர்மதி ஆசிரமத்துக்கு மகாத்மா காந்தி திரும்பி வந்தாரோ இல்லையோ, தேசமெங்கும் சிறிதும் எதிர்பாராத புதிய நிலைமை ஒன்று ஏற்பட்டிருந்ததாகத் தெரியவந்தது. அந்த நிலைமையும் மகிழ்ச்சி தரத்தக்க நிலைமைதான். தேசமெங்கும் தொண்டர் படை அமைப்பதற்குச் செய்த ஏற்பாட்டின் காரணமாக அந்த விசேஷ நிலைமை உண்டாயிற்று. லார்ட் ரெடிங் சர்க்காரின் ஆத்திர புத்தியினாலும் அந்தப் புதிய நிலைமை ஏற்பட்டது.

* * *

பம்பாயில் வேல்ஸ் இளவரசர் வந்து இறங்கிய அன்றைக்கு ஆரம்பித்த கலவரம் மகாத்மாவின் மனதைப் புண்படுத்தியதல்லவா? அதைக்காட்டிலும் அதிகமாக, அந்தக் கலவரத்தின் பூர்வாங்கமான பரிபூரண ஹர்த்தால் லார்ட் ரெடிங்கின் மனதைப் புண்படுத்தியது. பம்பாயில் மட்டுமல்ல; அதற்குப் பிறகு வேல்ஸ் இளவரசர் சென்ற பெரிய நகரங்களில் எல்லாம் பரிபூரண ஹர்த்தால் நடைபெற்றது. நல்ல வேளையாக அங்கெல்லாம் கலவரங்கள் ஒன்றும் விளையவில்லை. மகாத்மாவின் உண்ணாவிரதமே எச்சரிக்கையாயிருந்து மற்ற இடங்களில் கலவரம் நடைபெறாமல் காப்பாற்றியது.

ஆனால் பம்பாய்க் கலவரத்தைப் பற்றி லார்ட் ரெடிங் அவ்வளவாகக் கவலைப்படவில்லை. பம்பாயில் ஹர்த்தால் பரிபூரணமாக நடந்ததையும் இன்னும் மற்ற இடங்களில் நடந்து வருவதைப் பற்றியுந்தான் அவருக்கு ஆத்திரம் உண்டாயிற்று. "வேல்ஸ் இளவரசரை இப்போது வரவழைக்க வேண்டாம்!" என்று சிலர் யோசனை கூறியதற்கு மாறாக, லார்ட் ரெடிங் வேல்ஸ் இளவரசரைப் பிடிவாதமாக வரச் செய்திருந்தார். வேல்ஸ் இளவரசர் விஜயம் செய்யும்போது இந்தியப் பொதுமக்களிடையே அமுங்கியுள்ள இராஜ பக்தி பொங்கி எழுந்து ததும்பும் என்றும், அதன் பயனாக மகாத்மாவின் ஒத்துழையாமை இயக்கம் பறந்து போய்விடும் என்றும் அப்பாவி லார்ட் ரெடிங் நம்பியிருந்தார்! அந்த நம்பிக்கை அடியோடு பொய்த்துப் போகும்படி தேசத்தில் காரியங்கள் நடந்து வந்தபடியால் லார்ட் ரெடிங்கின் ஆத்திரம் பொங்கிற்று. அந்த ஆத்திரத்தை எப்படிக் காட்டுவது, மகாத்மாவின் வளர்ந்துவரும் சக்தியை எந்த இடத்திலே தாக்குவது என்று லார்ட் ரெடிங் துடிதுடித்துக் கொண்டிருந்தார். அதற்கு ஒரு வாய்ப்பு அவருக்குக் கிடைத்தது.

பம்பாயில் நடந்ததுபோல் நடந்துவிடாமல் தேசமெங்கும் அமைதியைப் பாதுகாப்பதற்காகத் தேசியத் தொண்டர் படைகளை அமைக்க வேண்டும் என்று காங்கிரஸ் காரியக் கமிட்டி தீர்மானித்ததல்லவா? அதன்படி தேசத்தின் பல பாகங்களிலும் தொண்டர் படைகள் அமைக்கத் தொடங்கினார்கள்.

"தொண்டர் படைகளை அமைப்பது சட்ட விரோதமான காரியம்" என்று லார்ட் ரெடிங்கின் சர்க்கார் ஒரு பெரிய வெடிகுண்டைத் தூக்கிப் போட்டார்கள்.

அமைதியைக் காப்பதற்காகத் தொண்டர் படைகள் ஏற்படுகின்றன என்பதை அதிகார வர்க்கத்தார் ஒப்புக் கொள்ளவில்லை. சர்க்காரை எதிர்க்கவும் சட்ட மறுப்பு இயக்கத்தைப் பலப் படுத்தவுமே தொண்டர் படைகள் அமைக்கப் படுவதாக அதிகார வர்க்கத்தார் சொல்லி, தொண்டர் படைகளைச் சட்ட விரோத ஸ்தாபனங்கள் ஆக்கினர்.

அதே சமயத்தில் வேறு சில அடக்கு முறை பாணங்களும் அதிகார வர்க்கத்தின் தூணியிலேயிருந்து வெளிவந்தன. 'இராஜத்வேஷக் கூட்டச் சட்டம்' என்று ஒரு சட்டம் இருந்தது. அதன்படி ராஜாங்கத்துக்கு விரோதமான பொதுக் கூட்டங்களைக் கூட்டக்கூடாதென்று தடுக்கலாம். மீறிக் கூட்டம் போட்டால் பலாத்காரமாய்க் கலைக்கலாம். அல்லது கைது செய்யலாம். இதைத் தவிரப் பழைய 144-வது பிரிவும் இருந்தது. தனிப்பட்ட தலைவர்கள் மீது வாய்ப்பூட்டு உத்தரவு போட இது உதவிற்று. இவ்விதமாக அந்தப் பிரசித்தி பெற்ற 1921-ம் வருஷத்து டிசம்பர் மாத ஆரம்பத்தில்

பண்டித மோதிலால் நேருவுங்கூடத் தங்கள் கவலையைத் தெரிவித்துக் கொண்டார்கள். மகாத்மா தமது கட்சியை எடுத்துச் சொன்னதின் பேரில் ஸ்ரீ வி. ஜே. படேலைத் தவிர மற்றவர்கள் எல்லாரும் ஒப்புக் கொண்டார்கள்.

**ப**ம்பாயில் காரியக் கமிட்டிக் கூட்டம் முடிந்த பிறகு மகாத்மா சபர்மதி ஆசிரமத்துக்குப் புறப்பட்டுச் சென்றார். ஆசிரமத்திலும் அதிருப்தி கொண்ட ஒரு கூட்டத்தார் மகாத்மாவின் வரவுக்காகக் காத்திருந்தார்கள். அவர்கள் சூரத் ஜில்லாவைச் சேர்ந்த காங்கிரஸ் தலைவர்களும் ஊழியர்களுந்தான். அந்த ஜில்லாவில் பர்தோலி — ஆனந்த் தாலூகாக்களில் நவம்பர் 23-ம் தேதியன்று பொதுஜனச் சட்ட மறுப்பு ஆரம்பிப்பதாக இருந்தது. பம்பாய்க் கலவரம் காரணமாக மகாத்மா அதை ஒத்திப் போட்டுவிட்டார். "பம்பாயின் குற்றம் காரணமாக எங்களைத் தண்டிப்பானேன்?" என்று சூரத் ஜில்லாக்காரர்கள் கேட்டார்கள். மகாத்மா பழையபடி அவர்களுக்குத் தம் கொள்கைகளை விளக்கிச் சொன்னார். "சுயராஜ்யம் சூரத் ஜில்லாவுக்கு மட்டும் நாம் கோரவில்லையே? இந்தியா தேசத்துக்கே கேட்கிறோமல்லவா? ஆகையால் இந்தியா தேசமெங்கும் அஹிம்சை பாதுகாக்கப் பட்டால்தான் பர்தோலியில் நான் இயக்கம் நடத்த முடியும்" என்றார். அவ்விதம் இந்தியா தேசமெங்கும் அமைதியை நிலைநாட்டுவதற்காகத் தேசியத் தொண்டர் படை திரட்டும் திட்டம் போட்டிருப்பதைப் பற்றியும் கூறினார். "அந்த வேலை நடக்கிறபடி நடக்கட்டும். அதற்கிடையில் பர்தோலி தாலூக்காவுக்கு நான் வந்து சுற்றிப் பார்க்கிறேன். பொது ஜனச் சட்டமறுப்பு ஆரம்பிப்பதற்கு வேண்டிய எல்லா நிபந்தனைகளையும் பூர்த்தி செய்திருக்கிறார்களா என்று தெரிந்து கொள்கிறேன்" என்றார்.

மகாத்மா வருவதாகச் சொன்னதே சூரத் ஜில்லாக்காரர்களுக்கு உற்சாகத்தை அளித்தது. மகாத்மாவும் பர்தோலிக்குச் சென்று சில தினங்கள் சுற்றுப் பிரயாணம் செய்தார். கிராமம் கிராமமாகப் போய்ப் பார்த்தார். அங்கங்கே பார்த்ததும் கேட்டதும் மகாத்மாவுக்குத் திருப்தி அளித்தது. சட்ட மறுப்புப் போருக்கு அவர் கூறிய நிபந்தனைகள் பெரும்பாலும் நிறைவேறியிருந்தன.

பர்தோலி தாலூகாவில் சகல ஜனங்களும் கதர் உடுத்தியிருப்பதை மகாத்மா கண்டு மகிழ்ந்தார். ஒரு கிராமத்திலாவது சர்க்கார் பள்ளிக்கூடம் நடைபெறவில்லையென்றும், தேசிய பாடசாலைகளுக்கே எல்லாப் பிள்ளைகளும் போகிறார்கள் என்றும் அறிந்தார். தாலூகாவில் ஒரு கள்ளுக்கடை கூடக் கிடையாது. எல்லாவற்றையும் அடியோடு மூடியாகிவிட்டது. சர்க்கார் கோர்ட்டுகளுக்கு யாருமே போவதில்லை. தகராறுகளைப் பஞ்சாயத்துக்களின் மூலமாகவே தீர்த்துக் கொண்டார்கள். இவையெல்லாம் காந்திஜிக்கு மிக்க உற்சாகத்தை அளித்தது. பிரயாணத்தின்போது அங்கங்கே கண்ட சில குறைபாடுகளையும் நிவர்த்தி செய்யும்படி மகாத்மா எச்சரித்தார்.

உதாரணமாக, ஒரு கிராமத்தில் சாதி ஹிந்துக்கள் ஒரு பக்கமாகவும் தீண்டாதார் இன்னொரு பக்கமாகவும் நின்றிருந்தார்கள். மகாத்மா இதைக் குறிப்பிட்டுக் காட்டியதும் எல்லாரும் ஒரே இடத்தில் கலந்து உட்கார்ந்து கொண்டார்கள்.

பர்தோலி சுற்றுப் பிரயாணத்தினால் மொத்தத்தில் மிகவும் உற்சாகத்தை அடைந்து மகாத்மா சபர்மதி ஆசிரமத்துக்கு திரும்பி வந்தார். தேசமெங்கும் அமைதி காக்கத் தகுந்த தேசியத் தொண்டர் படைகள் அமைக்கப்பட்டவுடனே பர்தோலியில் இயக்கம் ஆரம்பித்து விடலாம் என்ற நம்பிக்கை அவருடைய உள்ளத்தில் ஏற்பட்டது.



என்ஜின் டிரைவர்:— கடைசி வண்டியிலே நிறைய இடம் இருக்கிறதே; இங்கே ஏன் விழுந்தடித்துக் கொண்டு ஓடி வருகிறீர்கள்?

அவசரக்காரர்:— முன்னாடி அவசரமாய்ப் போகவேண்டியிருக்கிறது, ஐயா! தயவுசெய்து என்ஜினில் கொஞ்சம் இடம் கொடுங்கள்!




## 30. சிறைகள் நிரம்பின!

பம்பாய்க் கலகங்கள் மகாத்மாவுக்கு ஆத்ம வேதனையை உண்டு பண்ணியிருந்தன. ஆனால் அந்தக் கலகங்கள் நிறுத்தப்பட்ட விதம் அவருக்குத் திருப்தியை அளித்தது. போலீஸ் முயற்சியினாலும் இராணுவ நடவடிக்கைகளினாலும் கலகம் அடக்கப்பட்டிருந்தால் அதில் மகாத்மாவுக்குச் சிறிதும் திருப்தி ஏற்பட்டிராது. ஆனால் சமூகத் தலைவர்களின் முயற்சிகளினாலேயே கலகங்கள் நின்று அமைதி ஏற்பட்ட படியால் மகாத்மாவுக்கு மீண்டும் சாத்வீகச் சட்ட மறுப்பு இயக்கத்தை நடத்தலாம் என்ற நம்பிக்கை பிறந்தது. ஆனாலும் அதற்கு முன்னால் சில முன் ஜாக்கிரதையான ஏற்பாடுகள் செய்ய வேண்டியது அவசியம் என்பதைக் கண்டார். நவம்பர் 23-ம் தேதி பம்பாயிலே கூடிய காரியக் கமிட்டியாரிடம் அந்த ஏற்பாடுகளைப் பற்றிச் சொன்னார்.

முந்தைய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூட்டத்தில் மாகாணங்களுக்குப் பொதுஜனச் சட்ட மறுப்புத் தொடங்கும் உரிமை கொடுத்திருந்தது அல்லவா? அந்த உரிமையை எந்த மாகாணமும் உபயோகிக்க வேண்டாம் என்று காரியக் கமிட்டி தீர்மானம் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். பர்தோலியில் தாம் இயக்கம் தொடங்கும்போது தேசத்தில் மற்ற இடங்களில் எல்லாம் அமைதியைப் பாதுகாத்து வந்தால் அதுவே தமக்குப் பெரிய உதவியாயிருக்கும் என்று கேட்டுக் கொண்டார்.

இன்னொரு முக்கியமான திட்டத்தையும் காரியக் கமிட்டியின் முன்பு மகாத்மா பிரேரேபித்தார். அதாவது தேசமெங்கும் பல தொண்டர் படை ஸ்தாபனங்கள் அப்போது இருந்தன. அந்த ஸ்தாபனங்களையெல்லாம் ஒரே அமைப்பின் கீழ் கொண்டு வரவேண்டும். காங்கிரஸ் தொண்டர்கள், கிலாபத் தொண்டர்கள், கால்ஸா (சீக்கியத்) தொண்டர்கள் என்று தனித்தனி அமைப்பாயிராமல் ஒரே அகில இந்திய தேசியத் தொண்டர் படை ஸ்தாபனம் ஆக்கவேண்டும். இதில் சேர்த்துக் கொள்ளப்படும் ஒவ்வொரு தொண்டரிடமும் குறிப்பிட்ட சில வாக்குறுதிகள் வாங்கிக் கொள்ள வேண்டும். அந்த வாக்குறுதிகளில் முக்கியமானவை:

1 "தொண்டர் படைத் தலைவர்களின் கட்டளைகளுக்குத் தயங்காமல் கீழ்ப்படிந்து நடப்பேன்.

2 சொல்லிலும் செயலிலும் அஹிம்சா தர்மத்தைப் பாதுகாப்பேன்.

3 அமைதியைப் பாதுகாக்கும் கடமையைச் செய்வதில் ஏற்படும் அபாயங்களுக்குத் தயங்காமல் உட்படுவேன்."

இந்தமாதிரி வாக்குறுதி கொடுத்த தொண்டர்களைக் கொண்ட படைகளை நாடெங்கும் அமைத்து விட்டால், பம்பாயில் நடந்ததுபோன்ற கலவரம் வேறெங்கும் உண்டாகாமல் தடுக்கலாம் என்றும், அப்படி ஏற்பட்டாலும் உயிர்ச் சேதமில்லாமல் உடனே அமைதியை நிலைநாட்டி விடலாம் என்றும் மகாத்மா தெரிவித்தார்.

இதை ஒப்புக் கொண்டு காங்கிரஸ் காரியக் கமிட்டியார் அவ்விதமே தீர்மானம் செய்தார்கள்.

இந்தக் காரியக் கமிட்டிக் கூட்டத்துக்கு வந்திருந்தவர்களில் சிலருக்குப் பொதுஜனச் சட்ட மறுப்பை ஒத்திப் போடுவதில் அதிருப்தி இருந்தது. முக்கியமாக, தேசபந்து தாஸும், ஸ்ரீ வி. ஜே. படேலும் பொதுஜனச் சட்ட மறுப்பைத் தள்ளிப் போடுவதை ஆட்சேபித்தார்கள். லாலா லஜபதிராயும்



பண்டித நேரு இலங்கை கட்டுநாயகா விமான நிலையத்தில் வந்து இறங்கியபோது பி. பி. ஸி. நிலையத்தாரின் வேண்டுகோளுக்கு இணங்க 'மைக்கில்' பேசினார்.

முதல் நாள் மகாநாட்டில் பண்டித நேரு சர்வ தேச நிலைமையையும், அதற்கும் ஆசியாவுக்கும் உள்ள தொடர்பையும், ஆசியாவுக்கு ஐரோப்பிய வல்லரசுகள் செய்ய வேண்டிய கடமைகளையும் சந்தேகத்துக்கு இடமின்றி எடுத்துச் சொன்னார். இரண்டாவது நாள் மகாநாட்டில், வறுமை நீங்கினால் மட்டும் கம்யூனிஸத்துக்கு அணை போட்டுவிட முடியாதென்றும், கம்யூனிஸத்துக்குச் சரியான மாற்று மருந்து ஆசியா நாடுகளில் தேசிய உணர்ச்சி உரம் பெறச் செய்வதுதானென்றும் இந்திய பிரதம மந்திரி குறிப்பிட்டார். மகாநாட்டில் விவாதத்துக்கு வந்த ஒவ்வொரு பிரச்னையைப் பற்றியும் எல்லா மந்திரிகளும் சவிஸ்தாரமாகப் பேசினார்கள் என்றாலும், அவைகளைப் பற்றி பண்டித நேரு என்ன சொன்னார் என்பதிலேயே எல்லா மந்திரிகளுடைய கவனமும் பொதுஜனங்களின் கவனமும் ஈடுபட்டிருந்தது.

ஒரு வாரத்துக்கு முன்புதான், பாகிஸ்தான் யுத்தத்தை விரும்பினால் அதற்கு இந்தியாவும் தயாரென்று சர்தார் பட்டேல் முழங்கினார். இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கு மிடையில் யுத்தம் ஒன்றைத் தவிர மற்ற சகல விதமான தகராறுகளும் இருக்கையில் நேருஜியும் பாகிஸ்தான் நிதி மந்திரி ஜனுப் குலாம் முகம்மதும் இங்கு கூடிக் குலாவிச் சிரித்துப் பேசியது எல்லோருக்கும் ஆச்சரியமாக இருந்தது. காமன்வெல்த் மகாநாட்டின் முதல் நாள் இருவரும் கலகல வென்று பேசிக் கொண்டு கை கோத்துக் கொண்டே மகாநாட்டு அறைக்குள் நுழைந்தார்கள். பல்வேறு உபசார விருந்துகளிலும் அவர்கள் முக மலர்ச்சியுடன் அளவளாவிக் கலந்து கொண்டனர்.

இதேபோலப் பிரதமர் சேனநாயகாவும் பண்டித ஜவாஹர்லால் நேருவும் அளவளாவுவதைப் பார்த்தவர்கள் நிச்சயம் வியப்படைந் திருப்பார்கள். இலங்கைக்கும் இந்தியாவுக்கு மிடையில் பல பல ராஜ்யத் தகராறுகளிருபபதை அவர்கள் ஒருக்காலும் நம்ப மாட்டார்கள்.

★

நேருஜி தம்முடைய ஆப்த நண்பர் என்றும் அவரைத் தான் பார்த்தேயாக வேண்டுமென்றும் சொல்லிக் கொண்டு ஒரு சிங்கள சலவைத் தொழிலாளி இந்திய ஹை கமிஷனர் காரியாலயத்துக்கு வந்தார். அவர் ஒரு காலத்தில் நேருஜிக்கு உடுப்புகளைச் சலவை செய்து கொடுத்திருக்கிறாராம். நேருஜி வழங்கிய நற்சாட்சிப் பத்திர மொன்றையும் இந்தத் தொழிலாளி வைத்திருந்தார். இலங்கையில் தம் பழைய நண்பர்களை யெல்லாம் நேருஜி பார்க்க விரும்புவதாகப் பத்திரிகைகளில் படித்ததும் அந்தச் சலவைத் தொழிலாளி நாட்டுப்புறத்திலிருந்து ஓடோடியும் கொழும்புக்கு வந்தார். அவர் நேருஜியைத் தரிசிக்க ஹை கமிஷனர் காரியாலயத்தினர் ஏற்பாடு செய்தனர்.

# இலங்கையில் நேரு

[ நமது விசேஷ நிருபர் ]

ராஜோபசாரம் என்றால் இதைத்தான் சொல்ல வேண்டும். அன்பும், பக்தியும் கலந்து ஆயிரம் ஆயிரம் ஜனங்கள் அண்ணல் காந்தி மகானின் வாரிசான பண்டித ஜவாஹர்லாலுக்கு இங்கு அமோக வரவேற்பளித்தார்கள். நேருஜீ செல்லும் திசைகளிலெல்லாம் ஜன சமுத்திரம் திரண்டு வருவது போல மக்கள் திரண்டு நின்றனர். அவர்கள் முகங்களில்தான் என்ன ஆவல்? என்ன ஆனந்தம்? சிங்களத்தையன்றி வேறு பாஷையேயறியாத நாட்டுப்புறச் சிங்களவர்களும், "நோனாக்களும்", ஐரோப்பியப் பெண்களும், கைக் குழந்தைகளுடன் தோட்டக்காட்டுப் பெண்களும் சகல வகுப்பினருமாகப் பல ஆயிரம் ஜனங்கள் நேருஜீயைத் தரிசனம் செய்வதற்காக அவர் வரும் பாதைகளில் மண்டை வெடிக்கும் வெய்யிலிலே சாரி சாரியாக நின்றனர். அவர்களைக் கட்டுப்படுத்தி அமைதியுடனிருக்கச் செய்வது போலீசாருக்குப் பெரிய பிரச்னையாகியது. இரண்டு கஜத்துக்கு ஒருவர் வீதம் நின்ற கான்ஸ்டபிள்களும் குதிரைப் படைப் போலீசும் ஒழுங்கை நிலை நிறுத்தியதை விசேஷமாகக் குறிப்பிட வேண்டும்.

நேருஜீ செல்லும் முக்கியமான சில பாதைகளில் ரஸ்தாவின் குறுக்கே ஜனங்கள் வருவதைத் தடுக்க இரும்பு முள் வேலியும் போட்டிருந்தனர். காமன்வெல்த் நாட்டு மந்திரிகள் பலர் இங்கு வந்திருந்தும் ஒருவருக்காவது இவ்வளவு பந்தோபஸ்தும் ஏற்பாடுகளும் இல்லை. அவர்கள் நடமாடும் இடங்களில் ஜனக் கூட்டத்தையும் காணோம். ஆனால் பண்டித நேரு நடுப்பகலில் இந்திய ஹை கமிஷனர் ஆபீஸிற்கு வருகிறார் என்றால் காலை எட்டு மணியிலிருந்தே அங்கு கூட்டம் திரண்டுவிடும். நேருஜீ இலங்கையிலிருக்கும் வரை அவருக்குப் பாதுகாப்பளிக்கும் பெரும் பொறுப்பை உணர்ந்து இலங்கை அரசாங்கம்தான் இவ்வளவு போலீஸ் பந்தோபஸ்துகளையெல்லாம் செய்ததேயன்றி, பண்டிட்ஜீ வெகு அலட்சியமாகத்தான் தம் சம்பந்தப்பட்ட மட்டில் நடமாடினார். ஜனக் கூட்டம் தாங்கமுடியாத இடங்களில் கட்டுத் தளராத வாலிபன் துள்ளிக் குதிப்பது போல அவர் துள்ளியெழுந்து காரின் கூண்டு மேலேயே உட்கார்ந்து கொண்டார். நேருஜீக்கு அளிக்கப்பட்டதைப்போன்ற அன்பு நிறைந்த அமோக உபசாரம் இலங்கையில் இதுவரை வேறு எவருக்குமே சகல வகுப்பினராலும் ஒருமுகமாக அளிக்கப்பட்டதில்லை.

இந்தியத் தலைவர்கள் பண்டித நேருவை இந்திய ஹை கமிஷனரின் வாசஸ்தலத்தில் சந்தித்துப் பிரஜா உரிமைச் சட்டம், குடியேற்ற வெளியேற்றச் சட்டம், செலாவணிக் கட்டுப்பாடு முதலியவைகளினால் இந்தியர்கள் எவ்வளவு கடுமையாகப் பாதிக்கப்படுகிறார்கள் என்பதை எடுத்துச் சொல்லி இவைகளுக்கு ஏதாவது ஒரு பரிகாரம் செய்துவிட்டுப் போக வேண்டும் என்றார்களாம். அவ்வளவையும் பொறுமையோடு கேட்டுக்கொண்டிருந்த நேருஜீ, இலங்கை அரசாங்கத்துடன் உத்தியோக தோரணையில் இப்பிரச்னைகளைப் பற்றிப் பேசும் எண்ணம் தமக்கு இல்லையென்று கூறியதாகத் தெரிகிறது. எனினும் அவர் உத்தியோகப் பற்றற்ற முறையில் பிரதமர் சேனநாயகாவுடன் பேசியிருக்கக் கூடும் என்று கருதப்படுகிறது.

★

காமன்வெல்த் மகாநாட்டில் பண்டித நேருவின் பேச்சே ஓங்கி நின்றது.



பெரியவர்:—உங்கள் ஆபீஸில் மொத்தம் எத்தனை பேர் வேலை செய்கிறார்கள்?

குமாஸ்தா:—நாலு பேர்தான் வேலை செய்கிறார்கள்.

பெரியவர்:—பெரிய ஆபீஸ் என்கிறாய்; நான்கு பேர்கள்தானா இருக்கிறார்கள்?

குமாஸ்தா:—நிறையப் பேர் இருக்கிறார்கள். ஆனால் வேலை செய்வது நான்கு பேர்கள்தான்!

# முதல் சந்திப்பு
















இந்தியாவின் தூதர் பேராசிரியர் ராதாகிருஷ்ணன் தோழர் ஸ்டாலினை முதன் முதலில் சந்தித்ததாகச் செய்தி வந்திருக்கிறது. அந்தச் சந்திப்பில் இப்படி நடந்திருக்கலாம் அல்லவா?

என்பதே என்னுடைய ஆர்வம். இரு நாடுகளும் அவ்வாறு ஒத்துழைத்துத்தான் தீர வேண்டும் என்பதையே சரித்திரம் நமக்கு வற்புறுத்திக் காட்டுகிறது.

"இந்த நல்லுறவுக்குப் பங்கம் விளைவிக்கும் முறையில் இந்தியாவோ அல்லது இலங்கையோ நடந்து கொள்ளக் கூடாது.

"இதே கருத்தை, இதே உணர்ச்சியை இலங்கையும் பிரதிபலிக்கும் என்பது என்னுடைய நிச்சயமான அபிப்பிராயம். அவ்விதம் பிரதிபலிக்குமாயின் எந்தப் பிரச்னையாயினும் அதைத் தீர்ப்பதில் கஷ்டம் இராது.

"இந்த நாட்டிலுள்ள தோட்டங்களைப் பண்படுத்தி அபிவிருத்தி செய்வதற்காகப் பல பல ஆண்டுகளுக்கு முன் இந்தியத் தொழிலாளர்கள் இங்கு வந்தார்கள். ஆனால், அவர்களுடைய எதிர்காலம் நிலையற்றதாக இருந்து வருகிறது.

"இந்தத் தேசத்தின் அபிவிருத்திக்காக எவ்வளவோ பாடுபட்டுள்ள இவர்கள் கருணையுடன் நடத்தப்படுவார்கள் என்று நம்புகிறேன்."

ஐந்து லட்சம் ஜனங்கள் திரண்டிருந்த கூட்டத்தில் பண்டித ஜவாஹர்லால் நேரு அவ்வாறு கூறியதை ஐந்து கோடி ஜனங்களுக்கு மேல் பத்திரிகைகளில் வாசித்திருப்பார்கள்.

ஜவாஹர்லால்ஜியின் வேண்டுகோள் இலங்கைப் பிரதம மந்திரி ஸ்ரீ சேனநாயகாவின் செவியில் விழாமல் போயிருக்கலாம் என்று நினைப்பதற்கில்லை. ஏனெனில், ஸ்ரீ சேனநாயகா மேடையின்மீது பக்கத்தில் உட்கார்ந்து மேற்படி பிரசங்கத்தைக் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தார்.

எனவே காமன்வெல்த் மகாநாட்டின் நடவடிக்கைகளைக் காட்டிலும் இலங்கை இந்தியர் பிரச்னையையே பண்டித நேரு பரம முக்கியமாகக் கருதினார் என்பதற்கு அங்கு கூடியிருந்த ஐந்து லட்சம் ஜனங்களும் இலங்கைப் பிரமுகர்களும் ஸ்ரீ சேனநாயகாவும் சாட்சி சொல்வார்கள்!

## பங்கு இல்லையா?



1948–49-ம் வருஷத்தில் இந்திய ரயில்வேக்களின் வருமானம் 213.10 கோடி ரூபாயாகும் — பத்திரிகைச் செய்தி.

ரயில்வேக்களுக்குக் கிடைத்துள்ள சுமார் 214 கோடி ரூபாய் வருமானத்தில் தங்கள் இலாக்காவுக்குப் பங்கு கிடைக்குமா என்று இந்திய சர்க்கார் மந்திரிகள் ஏங்குகிறார்கள்.

கஷ்டமாக இருக்கிறது. அப்படியிருக்க, காமன்வெல்த் மகாநாடு நாலு ஐந்து நாட்களில் எந்தப் பிரச்னையைத்தான் தீர்க்க முடியும்?

• • •

சீனாவில் ஏற்பட்டுள்ள புதிய சர்க்காரை அங்கீகரிப்பதா வேண்டாமா என்பதுபற்றி காமன்வெல்த் மகாநாட்டில் காரசாரமான விவாதம் நடந்ததாம். அந்த சர்க்கார் இந்தியாவினால் அங்கீகரிக்கப் பட்டிருப்பதைச் சிலர் கடுமையாக ஆட்சேபித்தார்களாம்.

மாவோ துங் தலைமையில் அங்கு அமைந்துள்ள அரசாங்கம் சர்வதேச சட்ட திட்டங்களுக்கு முரணானதல்ல. தவிர, சீன மக்களின் ஆதரவும் அந்த சர்க்காருக்குப் பூரணமாக இருக்கிறது என்றே தெரிகிறது. துரதிர்ஷ்டவசமாக மார்ஷல் சியாங் சீன மக்களின் நம்பிக்கையை இழந்து விட்டார்.

எனவே, சீன மக்களின் ஆதரவு பெற்று அங்கு ஏற்படும் எந்தக் கட்சி சர்க்காரையும் அங்கீகரிக்க வேண்டியது உலக அரசியல் தர்மமாகும்.

பாலஸ்தீனத்தில் மிகவும் விவாதத்துக்கு இடமான இஸ்ரேல் சர்க்கார் ஏற்பட்ட சில மணி நேரத்துக்குள் அமெரிக்கா அந்த சர்க்காரை அங்கீகரித்தது ஞாபகம் இருக்கலாம். அமெரிக்கா அங்கீகரித்து விட்டது என்பதற்காக அதைப் பின்பற்றி சுமார் ஐம்பது நாடுகள் விழுந்தடித்துக் கொண்டு இஸ்ரேல் சர்க்காரை அங்கீகரித்தன.

புதிய சீன சர்க்கார் ஏற்பட்டுச் சில மாதங்களாகியும் அதை அமெரிக்காவோ, பிரிட்டனோ அங்கீகரிக்கவில்லை. அந்த இரண்டு வல்லரசுகளும் அங்கீகரிக்காததால் மற்றும் பல நாடுகளும் சீன சர்க்காரை அங்கீகரிக்கத் தயங்குகின்றன.

ஆனால் இந்தியா சுயநல நோக்கங் கொண்டு மேற்படி வல்லரசுகளின் வழியில் செல்லாமல், புதிய சீன சர்க்காரை அங்கீகரிப்பதே அரசியல் தர்மம் என்பதை உணர்ந்து அவ்வாறு செய்தது. எனவே, சீன சர்க்காரை இந்தியா அங்கீகரித்தது நேர்மையுள்ள நாடுகளின் நன்மதிப்பைப் பெறுவதற்கு உகந்த செய்கையேயன்றி, கண்டனத்துக்கு உரிய காரியம் அல்ல என்பது சத்திய நிச்சயம்.

காமன்வெல்த் மகா நாட்டுக்கு விஜயம் செய்த மற்ற மந்திரிகள் யாவரும் வந்தார்கள்; மகாநாட்டில் பேசினார்கள்; திரும்பிச் சென்றார்கள்- ஆனால், பண்டித ஜவாஹர்லால் நேருவுக்கு இலங்கை அமோக வரவேற்பு அளித்தது; அவர் ஒருவரைக் காண ஜனங்கள் பதினாயிரக்கணக்கில் திரண்டு வந்தார்கள்; அவர் பேசிய பொதுக் கூட்டத்தில் ஐந்து லட்சம் ஜனங்கள் கலந்து கொண்டார்கள்-என்றெல்லாம் பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன.

ஆயிரக் கணக்கான மைல்களுக்கு அப்பால் இருக்கும் அமெரிக்க ஜனங்களின் மனதைச் சரித்திரத்திலேயே கண்டிராதவாறு கவர்ந்த பண்டித ஜவாஹர்லால் நேருவை, பண்பாட்டிலும் நாகரிகத்திலும் பழைய சம்பிரதாயங்களிலும் ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக நெருங்கிய தொடர்புள்ள, அடுத்துள்ள இலங்கை மகா ஜனங்கள் பரவசம் அடைந்து வரவேற்றதில் ஆச்சரியம் என்ன இருக்கிறது?

இலங்கையிலுள்ள இந்தியமக்களின் கஷ்ட நஷ்டங்களைப் பற்றி ஜவாஹர்லால்ஜி இலங்கை சர்க்காருடன் எதுவும் பேசவில்லை என்று கூறப்படுகிறது. எதுவும் பேசவில்லை என்பதைக் காட்டிலும் எதுவும் பேச விரும்பவில்லை என்று கூறுவதுதான் பொருத்தமாக இருக்கும். எனவே, இவ்விஷயத்தில் இலங்கையிலுள்ள இந்திய மகாஜனங்கள் ஏமாற்றம் அடைய வேண்டிய அவசியமே இல்லை. அங்குள்ள இந்தியர்களின் சார்பாக இந்திய சர்க்கார் செய்ய வேண்டியதையெல்லாம் ஏற்கனவே செய்துவிட்டார்கள். இலங்கையிலுள்ள தங்களுடைய பிரதிநிதிமூலம் இன்னும் செய்து வருகிறார்கள். ஆகையால், காலக் கிரமத்தில் இலங்கை சர்க்கார் தங்களுடைய பிடிவாதத்தைக் கைவிட்டு இந்தியர்களிடம் நீதியுடன் நடந்து கொள்ளுவார்கள் என்ற நம்பிக்கை நமது தலைவருக்கு இருக்கலாம்.

இலங்கை இந்தியர் பிரச்னையையொட்டி ஜவாஹர்லால்ஜி உத்தியோக தோரணையில் இலங்கை சர்க்காருடன் பேசா விட்டாலும், அவ்விஷயமாகத் தாம் சொல்ல வேண்டியதையெல்லாம் கொழும்பில் நடந்த மாபெரும் பொதுக் கூட்டத்தில் சொல்லிவிட்டார்.

"இலங்கையிலுள்ள இந்தியர்களை எத்தனையோ பிரச்னைகள் எதிர் நோக்கி நிற்கின்றன. இந்தப் பிரச்னைகளை யெல்லாம் பற்றி நான் இங்கேயோ அல்லது வேறிடத்திலோ எதுவும் விவாதிக்கப் போவதில்லை.

"இந்தியாவும் இலங்கையும் எந்த விஷயத்திலும் பூரணமாக ஒத்துழைக்க வேண்டும்

# ஒரு கப் டீ!

"மகாநாடு வெற்றிகரமாக முடிவடைந்தது. விவாதத்துக்கு வந்த பிரச்னைகளை ஒட்டி யாதொரு முடிவும் ஏற்படா விட்டாலும் மகா நாட்டுக்கு விஜயம் செய்திருந்த பிரதிநிதிகள் பரஸ்பரம் அன்புடன் பழகினார்கள்; சுமுகமாகப் பேசிக் கொண்டார்கள்."

பொதுவாக ராஜதந்திரிகள் அடங்கிய மகாநாடுகளின் முடிவைப் பற்றி மேலே குறிப்பிட்ட தோரணையில் அறிக்கைகள் வெளியாவது உண்டு.

பிரச்னைகளைத் தீர்க்க முடியாத மகாநாட்டை "வெற்றிகரமான மகாநாடு" என்று வர்ணிப்பது எவ்வாறு பொருந்தும் என்பதைப் பற்றி அத்தகைய மகாநாடுகளின் நிர்வாகிகள் சிறிதும் கவலைப்படுவதில்லை.

இலங்கையிலே சென்ற வாரம் காமன்வெல்த் மகாநாடு நடந்து முடிவுற்றது அல்லவா? அந்த மகாநாடு மகத்தான வெற்றியுடன் முடிந்ததாகக் காமன்வெல்த் நாடுகளைச் சேர்ந்த சில பிரதிநிதிகள் வர்ணித்தார்கள்.

அதற்கு விஜயம் செய்திருந்த நியூஸிலந்து தேசத்தின் வெளிநாட்டு மந்திரி, மேற்படி காமன்வெல்த் மகாநாடு நூறு சத விகிதம் வெற்றிகரமாக முடிந்தது என்று ஆனந்தப்பட்டார்.

மகா நாட்டில் பிரதிநிதிகளிடையே விவாதமானது உஷ்ணமான கட்டத்தை அடைந்த போதெல்லாம், அதன் தலைவரும் இலங்கைப் பிரதம மந்திரியுமான ஸ்ரீ சேனநாயகா, 'ஒரு கப் டீ சாப்பிடுங்கள்' என்று கூறி நிலைமையைச் சமாளித்ததாகக் கனடா மந்திரி மகிழ்ச்சியடைந்தார்.

இந்தியத் தொழிலாளரின் இடைவிடா உழைப்பினால் உற்பத்தியாகும் இலங்கைத் தேயிலை ருசியில் ஏற்கெனவேயே உலகப் பிரசித்தி பெற்றது.

ராஜ தந்திரிகளின் அபிப்பிராய பேதத்தையும் ஆத்திரத்தையும் கூடத் தணிக்கும் சக்தி அதற்கு உண்டு என்பது இப்போது ஸ்ரீ சேனநாயகாவின் மூலம் வெளியாகியிருக்கிறது போலும்!

எனினும், ராஜதந்திர பாஷையில் நம்பிக்கையில்லாத பண்டித ஜவாஹர்லால் நேரு, காமன்வெல்த் மகாநாட்டின் சாதனையை உண்மையாகவும் அழகாகவும் எடுத்துக் கூறியிருக்கிறார்.

"காமன்வெல்த் மகாநாட்டில் ஒரு முக்கியப் பிரச்னையையாவது தீர்க்காமல் நாம் எல்லோரும் திரும்பிச் செல்லுகிறோம். இத்தகைய மகாநாட்டினால் உலகப் பிரச்னைகளைத் தீர்ப்பது சாத்தியமாயின், வெகு காலத்துக்கு முன்பே அவைகள் தீர்க்கப் பட்டிருக்கும். எனவே, இந்த மகாநாட்டினால் உலகப் பிரச்னைகளைத் தீர்க்க முடியாவிட்டாலும், நிலைமை மேற்கொண்டு மோசமாகி விடாமல் தடுப்பதற்கு இது போன்ற மகாநாடு உதவியாக இருக்கிறது" என்று ஜவாஹர்லால்ஜி குறிப்பிட்டார்.

உதாரணமாக, பிரிட்டனுக்கும் இந்தியாவுக்கும் ஸ்டர்லிங் கையிருப்பு விஷயமாகத் தகராறு இருந்து வருகிறது. இந்தியா—பாகிஸ்தான், இந்தியா—இலங்கை, இந்தியா, பாகிஸ்தான்—தென்னாப்பிரிக்கா இந்த நாடுகளுக்குள் தகராறும் விரோதமும் நாளுக்குநாள் முற்றி வருகின்றன. அந்தத் தகராறுகளையும் விரோதத்தையும் தீர்ப்பதற்கு முன், அவை முற்றாமல் தடுக்க வேண்டியது அவசியம் என்பதே ஜவாஹர்லால்ஜி கூறியிருப்பதன் கருத்தாகும்.

மகாநாட்டுக்கு விஜயம் செய்த மந்திரிகள் இந்தோனேஷ்யா சுதந்திரம் பெற்றதைக் குறித்துத் தங்களுடைய மகிழ்ச்சியைத் தெரிவித்தார்கள். இந்தோ—சீனா, பர்மா, மலாயா கலகங்களை யொட்டிக் கவனம் செலுத்தினார்கள். சீனாவில் ஏற்பட்டுள்ள புதிய சர்க்காருக்கும் காமன்வெல்த் நாடுகளுக்கும் எதிர்காலத்தில் எத்தகைய தொடர்பு இருந்து வருவது என்பதைப் பற்றி விவாதித்தார்கள். பொதுவாக ஐரோப்பாவிலும் ஆசியாவிலும் உள்ள நிலைமையைப் பரிசீலனை செய்தார்கள். மற்றும் பொது உடைமை, ஜப்பானின் எதிர்காலம் முதலிய பல்வேறு விஷயங்களைப் பற்றியும் பேசித் தீர்த்தார்கள். இறுதியாக ஒரு முக்கிய விஷயத்திலும் ஒருவித முடிவுக்கும் வராமல் கலைந்தார்கள்.

சர்வ தேச மகாசபை எத்தனையோ மாதங்களாக விவாதிக்கும் பிரச்னைகளில் ஒன்றைத் தீர்ப்பது கூட மிகவும்

# சிங்கம் வேட்டைக்குச் சென்றது!




சர்தார் பட்டேல் சென்ற வாரத்தில் கல்கத்தாவுக்கு விஜயம் செய்தார். கல்கத்தாவில் நடந்து வரும்

சலுகைக்குக் கொடுக்க வேண்டியவர்களாக இருக்கிறார்கள். குடிசைத் தொழிலுக்கு ஊக்கமளித்து அது அழியாமல் பாது காக்க வேண்டியது சர்க்காரின் முக்கிய கடமை. அப்படியிருக்க மேலே குறிப்பிட்ட நிலைமைக்குக் காரணஸ்தர்களான சர்க்கார் அதிகாரிகள் தெரிந்தும் அவ்வாறு அக்கிரமமான உத்தரவைப் பிறப்பித்தார்களா அல்லது அறியாமையினால் பிறப்பித்தார்களா? அது எப்படியாயினும், வெல்லம் காய்ச்சும் தொழில் நசிக்கும்படியும் ஏழை விவசாயிகள் கஷ்டப்படும்படியும் அதிகாரிகள் பார்த்துக் கொண்டிராமல் உடனே மேற்படி விசித்திர உத்தரவை ரத்து செய்வார்களாக!

## பாவம் ஓரிடம்...

சர்வ மதங்களும் சமமாகக் கருதப்படும் இந்தியாவில் மத வெறிக்கு இடமில்லை; மத வெறியை அடிப்படையாகக் கொண்ட ஸ்தாபனத்துக்கு இடமேயில்லை. பாரத நாடு பிளக்கப்பட்டு பாகிஸ்தான் ஏற்படுவதற்குமுன் நிலைமை எப்படியாயினும், பாகிஸ்தான் ஏற்பட்டதற்குப் பின் நிகழ்ந்த படுபாதகங்கள் மத வெறி எவ்வளவு கொடிய பைசாசத் தன்மை கொண்டது என்பதை நிரூபித்து விட்டன. அவ்வாறு நிரூபிக்கப்பட்டதன் பலனாகவே வட இந்தியாவில் முஸ்லிம் பிரமுகர்கள் முஸ்லிம் லீகுக்கு முற்றுப் புள்ளி வைத்துவிட முற்பட்டார்கள். ஏராளமானவர்கள் தேசிய காங்கிரஸ் மகாசபையிலும் சேர்ந்தார்கள். எனினும், அப்போது வட இந்தியாவிலிருந்து விரட்டப்பட்ட முஸ்லிம்லீகுக்கு சென்னை மாகாணத்தில் சிலர் அடைக்கலம் அளித்தனர்.

இந்த மாகாணத்தில் வசிக்கும் முஸ்லிம்கள் எத்தனையோ ஆண்டுகளாகச் சகோதரர்களைப் போல் வாழ்ந்து வருகிறார்கள். வட இந்தியாவில் மத வெறி கோர தாண்டவம் ஆடியபோதுகூட, இங்கு அதன் எதிரொலியாக அற்ப அசம்பாவிதமும் ஏற்படாததே அதற்குச் சான்றாகும். அப்படியிருக்க, இந்த மாகாணத்தில் வகுப்பு வெறியை அடிப்படையாகக் கொண்ட லீகுக்கு அடைக்கலம் அளிக்க அவசியமே இல்லை. இந்த உண்மையை இப்போதாவது பல முஸ்லிம் பிரமுகர்களும் உணர ஆரம்பித்திருப்பது திருப்திகரமான விஷயமே. எனினும் இவ் விஷயத்தில் முஸ்லிம் பாமர மக்களுக்கு என்றுமே சந்தேகம் இருந்ததில்லை.

## ....பழி ஓரிடம்!

சென்னையிலே இந்த மாகாண முஸ்லிம்களின் சபை ஒன்று சமீபத்தில் கூடியது. அரசியலில் தங்களுடைய எதிர்காலம் என்ன என்பதை நிர்ணயித்துக் கொள்வதற்காகவே அவர்கள் கூடினார்கள். தற்போதுள்ள அரசியல் கட்சி எதிலாவது சேருவதா அல்லது தங்களுக்கென்று தனிக் கட்சியாக ஒன்றை ஏற்படுத்திக்கொள்வதா என்பதை யொட்டிச் சர்ச்சை நடந்தது. கடைசியாக முஸ்லிம் பொது ஜனங்களின் கருத்தை அறிந்து கொள்வதற்காக அவர்கள் ஒரு கமிட்டியை நியமித்திருக்கிறார்கள்.

மத விஷயங்களில் இந்திய சர்க்காருக்கும் தலைவர்களுக்கும் உள்ள அந்தரங்க சுத்தி சுதந்திரக் குடியரசுத் திட்டத்திலிருந்து ஐயம் திரிபுக்கு இடமின்றி வெளியாகியிருக்கிறது. அதன் காரணமாகவே ஆயிரக் கணக்கான முஸ்லிம்கள் காங்கிரசில் சேர்ந்திருக்கிறார்கள். சுயநல நோக்கம் கொண்ட ஒரு சிலருக்குத்தான் இன்னும் மனம் தெளிவு அடையவில்லை என்பதை மேற்படி கமிட்டி நியமனம் காட்டுகிறது. முஸ்லிம் பொது மக்களிடையே சந்தேகத்துக்கு இடமில்லாத ஒரு விஷயத்தைப் பற்றி அவர்களுடைய அபிப்பிராயத்தைக் கோருவானேன்? தங்களுடைய தயக்கத்தையும் தவறையும் தடுமாற்றத்தையும் மறைப்பதற்காகப் பொதுஜனங்களின்மீது பழியைப் போட முற்படுவானேன்?

## ஞாபகம் இல்லையா?




வந்தவன்:-சாமி! பொங்கல் இனாம்!

வீட்டுக்காரர்:-யார்தான் பொங்கல் இனாம் கேட்கிறது என்பதே இல்லையாது. முன்பின் தெரியாதவன் எல்லாம் பொங்கல் இனாம் என்று வந்து விடுகிறான். யாரடா நீ?

வந்தவன்:—நீங்கள் யார் என்று என்னைக் கேட்டு விட்டீர்களே! நான் வருஷா வருஷம் தவறாமல் பொங்கல் இனாமுக்கு வருகிறேனே, அதற்குள் மறந்து விட்டீர்களா?

கினர். ஐ. ஸி. எஸ். வர்க்கத்திலேயிருந்து போலீஸ் தலைமைக்கு நியமிக்கப்பட்ட முதல் உத்தியோகஸ்தர் அவர்தான். சில வருஷ காலம் போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் உத்தியோகத்தைத் திறம்பட வகித்து நாட்டில் தலைவிரித்தாடிய நாச சக்திகளை அடக்கிப் புகழ் பெற்றார். சமீபத்தில் ரிவினியூ போர்டு அங்கத்தினர் பதவி வகித்து நாட்டின் பஞ்ச நிலைமையைச் சமாளிக்கப் பெரும் பிரயத்தனங்கள் செய்து வந்தார். ஸ்ரீ ஸி.கே. விஜயராகவன் சிறந்த கலா ரஸிகர். ஆங்கில நாகரீகத்தில் பயிற்சி பெற்றவரானாலும் நமது நாட்டுக்குரிய கர்நாடக சங்கீதம், பரத நாட்டியம் முதலிய தேசீய கலைகளிலேயே அவருடைய உள்ளம் கலை இன்பத்தைக் கண்டது. அவருடைய புதல்வியர் இருவர், குமாரி பத்மினியும் ஹேமமாலினியும், கர்நாடக சங்கீதத்தை முறைப்படி பயின்று தேர்ச்சி பெற்று விளங்குகின்றனர். குமாரி ஹேமமாலினி பரத நாட்டியக் கலையிலும் சிறந்த புகழ்பெற்றிருக்கிறார். ஸ்ரீ விஜயராகவன் அவர்களுடைய எதிர்பாராத மரணத்தினால் அனலில் மெழுகுபோல உருகிநிற்கும் அவருடைய வாழ்க்கைத் துணைவியாருக்கும் புதல்வர் - புதல்வியருக்கும் அவருடைய எண்ணற்ற நண்பர்களுக்கும் நம்முடைய அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.



ஸ்ரீ ஸி. கே. விஜயராகவன், ஐ. ஸி. எஸ்.

## வெல்லத்துக்கு ஆபத்து

நமது நாட்டின் பொருளாதார அபிவிருத்திக்குக் குடிசைத் தொழில்களின் அபிவிருத்தி அத்தியாவசியம் என்பதை மறுப்பவர் யாரும் இல்லை. அப்படியிருக்க, அந்தக் குடிசைத் தொழில்களில் ஒன்று நசித்துப் போவதற்கான காரியத்தை சர்க்கார் அதிகாரிகளே செய்தால் அதை என்னவென்று வர்ணிப்பது? நமது மாகாணத்தில் கொடுமுடி போன்ற சில இடங்களில் விவசாயிகள் கரும்பு சாகுபடி செய்து அதைக் கொண்டு தாங்களே சொந்தத்தில் வெல்லம் காய்ச்சுகிறார்கள். சர்க்கரைப் பஞ்சம் ஏற்பட்டுள்ள இக்காலத்தில், —முக்கியமான நகரங்களைத் தவிர மற்ற இடங்களில் சர்க்கரையைக் கண்ணால் காண்பதும் குதிரைக் கொம்பாக இருந்து வரும் இந்தச் சமயத்தில் ஜனங்களுக்கு வெல்லமாவது கிடைக்க வழியிருக்கிறது. ஆனால், சர்க்கார் சமீபத்தில் பிறப்பித்த ஓர் உத்தரவால் அதற்கும் ஆபத்து ஏற்பட்டு விடுமோ என்று தோன்றுகிறது. இதன் சம்பந்தமாக, இந்த இதழின் வேறொரு பக்கத்திலே "வெல்லம் காய்ச்சாதே" என்ற தலைப்பில் வட்டமேஜையில் பிரசுரமாகியுள்ள கடிதத்தை அரசாங்க அதிகாரிகள் கவனிக்கக் கோருகிறோம்.

## அறியாமையா? அக்கிரமமா?

இதைத் தவிர, நிலக்கோட்டை கரும்பு சாகுபடி செய்வோர் சங்கம் முன் அறிவிப்பு எதுவுமின்றித் திடீரென்று சர்க்கார் பிறப்பித்துள்ள உத்தரவைக் கண்டித்து சத்தியாக்கிரகம் செய்யவும் தீர்மானித்திருக்கிறது. கரும்பு மகசூலை, குறிப்பிட்ட சர்க்கரைத் தொழிற்சாலைக்குக் கொடுத்துவிட வேண்டும் என்பதே சர்க்காரின் உத்தரவாகும். அவ்வாறு செய்வதால் நீண்ட காலமாக நடந்துவரும் மேற்படி குடிசைத் தொழில் அழிந்து அதை நம்பி வாழும் நூற்றுக் கணக்கான குடும்பங்கள் ஜீவனத்துக்கு வழியின்றி மனைவி மக்களுடன் இந்தப் பஞ்ச காலத்தில் நடுத் தெருவில் நிற்க நேரிடும் என்று அச்சங்கத்தின் பிரதிநிதி மன உருக்கத்துடன் நமக்கு எழுதியிருக்கும் கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

கரும்பு மகசூலைச் சர்க்கரைத் தொழிற்சாலைக்குக் கொடுப்பதால் நூற்றுக் கணக்கான தொழிலாளருக்கும் மாடுகளுக்கும் வேலையில்லாமல் போகிறது. தங்களுடைய சொந்த உழைப்பால் வெல்லம் காய்ச்சி டன் எண்பது ரூபாய் விகிதம் விற்கும் விவசாயிகள் சர்க்கார் உத்தரவுப்படி கரும்பை டன் நாற்பத்தாறு ரூபாய் பத்து அணா விகிதம் தொழிற்

மலர் 9



# கல்கி

தமிழ்த் திருநாடு தன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா-பாரதியார்

இதழ் 25

## என்ன சேதி?

### பாராட்டுகிறோம்!

உத்தம தேச பக்தரும் சிறந்த தியாகியுமான திருவண்ணாமலை ஸ்ரீ என். அண்ணாமலைப் பிள்ளை அவர்கள் வருகிற தமிழ் மாகாண மகாநாட்டுக்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டது அறிந்து மிக்க மகிழ்ச்சி அடைகிறோம். தமிழ் மாகாண மகாநாடு வருகிற பிப்ரவரி மாதம் 4, 5 தேதிகளில் சென்னைமா நகரில் நடைபெறப் போகிறது. பெருந் திருவிழாவைப் போல் சுதேசிப் பொருட்காட்சி நடந்து வரும் தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானத்திலேயே இந்த மாகாண மகாநாடும் நடைபெறும் என்று தெரிகிறது. மகாநாட்டு நிர்வாகிகளுடன் பரிபூரணமாக ஒத்துழைத்து மகாநாட்டைச் சிறப்பாக நடத்தித் தருமாறு சென்னை நகரவாசிகளை வேண்டிக் கொள்கிறோம். ஆந்திர சகோதரர்கள் நம்மை விட்டுப் பிரிந்து போகப்போகிற இந்த வருஷத்தில் சென்னை நகரில் தமிழ் மாகாண மகாநாடு நடைபெறுவது மிகப் பொருத்தமானது. இத்தகைய ஏற்பாட்டைச் செய்த தமிழ் நாட்டுக் காங்கிரஸ் கமிட்டியைப் பாராட்டுகிறோம்.

### தலைகாட்டுகிறான்!

தமிழ் நாட்டின் சிறப்பான பண்டிகை பொங்கல். இந்த மங்கள நன்னாளில் "பால் பொங்கிற்றா?" என்று தமிழ் மக்கள் ஒருவரையொருவர் கேட்டு மகிழ்வது வழக்கம். இந்த ஆண்டில் நம் நேயர்களைப் பார்த்து அவ்விதம் கேட்க நமக்குத் தயக்கமாயிருக்கிறது. இயற்கையின் மறக் கருணையினால் இந்த வருஷத்திலும் பருவ மழை பொய்த்து விட்டது. தமிழ் நாட்டின் பல பகுதிகளில் இப்போதே பஞ்ச நிலைமை தோன்ற ஆரம்பித்து விட்டது என்று அறிந்து பெரிதும் கவலை உண்டாகிறது. இந்த நிலைமையில் பொங்கல் பண்டிகையை எவ்வாறு மக்கள் குதூகலமாகக் கொண்டாடியிருக்க முடியும்? வயல்களில் விளைச்சல் பொங்கியிருந்தால் அல்லவா வீட்டிலும் பொங்கல் அன்றைக்குப் பால் பொங்கும்? எட்டிப் பார்க்கும் பஞ்ச அரக்கனை விரட்டி அடிப்பதற்கு வேண்டிய ஆயத்தங்களைச் சென்னை மந்திரிமார்கள் கண்ணும் கருத்துமாய்ச் செய்து வருகிறார்கள் என்று அறிந்து ஓரளவு ஆறுதல் உண்டாகிறது. பஞ்சம் தலை காட்டும் பிரதேசங்களில் வேலையில்லாத மக்களை நீர்ப்பாசன வேலைகளில் ஈடுபடுத்தி வேலை கொடுப்பதற்கு மராமத்து இலாகா மந்திரி திட்டம் போட்டிருக்கிறார் என்று தெரிகிறது. இது பேஷான யோசனை என்பதில் சந்தேகமில்லை. பஞ்ச அரக்கனை வைத்து வேலை வாங்கி இனிப் பஞ்சம் வராமல் தடுக்கும் ஏற்பாடு சிறந்த ஏற்பாடுதானே? இந்தத் திட்டம் காரியத்தில் நன்கு நடந்து வெற்றிபெற வேண்டும் என்று பிரார்த்திக்கிறோம்.

### பாவி யமனே!

விதியைப் போல் கொடுமையானது வேறொன்றுமில்லை. யமனைப் போல் இரக்கமற்ற பாவி வேறு யாரும் இல்லை. சென்னை மாகாணத்திற்கு அரிய தொண்டு செய்து வந்த விலை உயர்ந்த மனித உயிர் ஒன்றைச் சென்ற வாரத்தில் காலன் கொண்டு போய் விட்டான். ஸ்ரீ சி. கே. விஜயராகவன் ஐ. சி. எஸ். அவர்கள் மரணமடைந்த செய்தி அவரை அறிந்தவர்கள் எல்லாரையும் திடுக்கிட்டுக் கண்ணீர் விடும்படி செய்தது. பழைய பிரிட்டிஷ் ஆட்சியில் திறமையான உத்தியோகஸ்தர் என்று பெயர் எடுத்துப் புதிய சுதந்திர அரசாங்கத்திலும் தலை சிறந்த புகழ் பெற்ற பிரமுகர் அவர். அதிகார வர்க்கத்திலே மட்டுமின்றிச் சமூக வாழ்க்கையிலும் அவர் பிரபலமடைந்து விளங்
























# கல்கி

## பொருளடக்கம்


மலர் 9 | இதழ் 25 | ஜனவரி 22 | விரோதி | தை 9




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும் சம்பவங்களும் கற்பனையே




ஆரோக்கிய வாழ்க்கைக்கு நல்ல பழக்க வழக்கங்கள் அத்யாவசியம். பற்களின் ஆரோக்கியத்தைச் சரியானபடி பாதுகாத்துக் கொள்வது ஒரு நல்ல பழக்கம். இது பற்களை உறுதியாகவும் ஈறுகளை ஆரோக்கியமாகவும் இருக்க உதவுகிறது. இதற்கு முக்கிய தேவை ஒரு நல்ல பற்பசை. நீம் டூத் பேஸ்ட் ஒரு சிறந்த பற்பசை. உயர்ந்த சரக்குகளைக் கொண்டு தயாரிக்கப் பட்டிருக்கும் இதில் வேப்பங் குச்சியின் சத்து அடங்கி யிருக்கிறது.




# கல்கி



## இந்தியக் குடியரசு மலர்

1950-ம் வருஷம் ஜனவரி மாதம் 26-ம் தேதி இந்தியாவின் சுதந்திரக் குடியரசு ஸ்தாபிதமாவதை முன்னிட்டுக் "கல்கி" விசேஷ மலர் ஒன்று வெளியிடப்படும். "கல்கி"யின் வார இதழ் அளவிலேயே 200 பக்கங்களுக்கு மேற்கொண்டதாய்ப் பல வர்ணச் சித்திரங்களுடன் விளங்கும். அறிஞர்களும், அரசியல் தலைவர்களும் ஆசிரியர்களும் எழுதிய கதைகள், கட்டுரைகளுடன் பொலிவுறும்.

**இது "கல்கி" வார இதழுடன் சேர்ந்ததல்ல**

**தனி வெளியீடு**

**விலை ரூ. 1-0-0**



**தபால் செலவு:**

இந்தியா, இலங்கை அணா 6
இதர வெளி நாடுகள் அணா 8

**பிரதிகள் ரிஜிஸ்தர் தபாலில் அனுப்பப்படும்**

**உங்கள் பக்கத்திலுள்ள "கல்கி" ஏஜண்டுகளிடம் உடனே பதிவு செய்து கொள்ளுங்கள்**

மலரின் கிரயத்தைப் பிரத்யேகமாகச் செலுத்தும் சந்தாதாரர்களுக்கு மட்டும்தான் மலர் அனுப்பப்படும்



மானேஜர்

கல்கி காரியாலயம்

கீழ்ப்பாக்கம் :: சென்னை

# நிச்சயமான ஆரோக்கியம்

## தினம் ½ அணா  செலவில்



முக்கியமாக பட்டணங்களில் தற்சமயம் கிடைக்கக்கூடிய உணவுகளில் விடமின்கள்* மிக்க குறைவாயுள்ளன. இந்த அத்தியாவசியமான சத்துப்பொருள்கள் உமது உணவில் குறைந்திருப்பதின் காரணமாய், உங்களுக்கு ஜலதோஷம், காரணமின்றி ஜுரங்களும் மற்ற உபாதைகளும் ஏற்படுகின்றன.

குறைந்த பக்ஷம் தேவையாயுள்ள A & D* விடமின்களை தினம் உட்கொள்ளாவிடில் நீங்கள் பூரண ஆரோக்கியத்துடன் இருப்பது முடியாதென்றே சொல்லலாம். ஒன்று அல்லது 2 ஸ்பூன் எம். ஜி. பி. (மெட்ராஸ் கவர்மெண்ட் பிராண்ட்) ஷார்க் லிவர் ஆயிலை ஒவ்வொரு வேளை ஆகாரத்திற்கு பிறகு உட்கொண்டால் மொத்தத் தேவையை இந்த விடமின்கள்* பூர்த்தி செய்யும். ஓர் ஆளொன்றுக்கு நாளொன்றுக்கு ½ அணா தான் செலவு—குழந்தைகளுக்கு அதில் பாதி அல்லது இன்னும் கம்மி செலவே.





மதராஸ் கவர்மெண்ட் பிராண்ட்

# ஷார்க் லிவர் ஆயில்

* விடமின் 'A' :— உடல் வளர்ச்சிக்கும் வலிமைக்கும் சாதகமானது. ஜலதோஷம், சின்னம்மை, நீர்க்கொள்ளுவான், கூகை நீர்க்கட்டு முதலிய நோய்களைத் தடுத்து—வெட்டுக்காயம் பிளந்தகாயம் இவற்றின்று விஷம் பரவாமல் பாதுகாக்கின்றது.
* விடமின் 'D' :— கணைச்சூட்டைத் தவிர்க்கிறது. உறுதியான எலும்பு, பற்கள் வளர்ச்சிக்கும் சதைக்கும் இன்றியமையாதது.

கொழுப்புகள் :— விடமின்களை பூர்ணமாய் ஜீரணிக்கத் தேவையானதும், அதிகப்படி சக்தியை கொடுப்பதற்கும் வேண்டுமென்ற அளவு உடலில் எண்ணெயும் உள்ளது.

### அ ட மி ன்

சிசுக்களுக்கும் வயதானவர்களுக்கும் எம். ஜி. பி. ஷார்க் லிவர் ஆயிலில் உள்ள கொழுப்புகள் ஒத்துக்கொள்ளாமல் சிலசமயங்களில் ஜீரணம் பாதிக்கப்படலாம். அப்பேர்ப்பட்ட சமயங்களில் ஆகாரச் சத்துகளின் பூர்த்தி செய்யும் முழு சாரமும் உள்ள வெளுளி அடமின் அதே பாதுகாப்பைப் பூர்த்தி செய்கின்றது.

தயாரிப்பாளர்கள் :—

## கவர்மெண்ட் ஆயில் பாக்டரி, கள்ளிக்கோட்டை

டிபார்ட்மெண்ட் ஆப் இண்டஸ்ட்ரீஸ் & காமெர்ஸ்

## கவர்மெண்ட் ஆப் மெட்ராஸ்

தென் இந்தியாவுக்கு வினியோகஸ்தர்கள்

பாரி & கோ, லிட்., மெட்ராஸ்.

SISTA'S-GO 83-TAMIL

# அருமையாகப் பெற்ற சுதந்திரத்தை ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள்

காரண்டியும் கேர்த்தியும் உள்ள கைக் கடியாரங்கள் சரசமான விலையில் கிடைக்கின்றன. ஜாக்கிரதையான பரிசோதனைக்குப் பிறகு கீழே காணும் கடியாரங்கள் மிகவும் அழகான ஸ்ட்ராப்புடன் விளம்பரம் செய்யப்பட்டிருக்கின்றன. பாக்கிங் சார்ஜோ தபால் கூலியோ கிடையாது. வி. பி. பி. மூலம் பெற்றுக் கொள்ளலாம்.

ரூபாய் ஐம்பதுக்கு மேற்பட்ட இலங்கை ஆர்டர்கள் போஸ்டேஜ் ஆர்டருடன் அனுப்ப வேண்டும்.



## ★ மதிப்புள்ள பரிசுகள் ★

நான்கு கைக் கடியாரங்களுக்கு ஆர்டர் செய்தால் ஒரு அழகான அலாரம் கடியாரம் ஆர்டருடன் அனுப்பி வைக்கப்படும். மூன்று கைக் கெடியாரங்களுக்கு ஆர்டர் செய்தால் ஒரு ஸ்லிம் பாக்கெட் கடியாரமும் அனுப்பி வைக்கப்படும். இரண்டு கைக் கடியாரங்களுக்கு ஆர்டர் செய்தால் அழகான அமெரிக்கன் பேனாவுடன் பெறு இனாமாக அனுப்பப்படும். 7-2-50க்குள் ஆர்டர் செய்து இந்த அரிய சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள்.





| | | | |
|---|---|---|---|
| 805 | க்ரோம் கேஸ் 7 ஜுவல் | ரூ. | 31 |
| 806 | ரோல்டு கோல்டு கேஸ் 7 ஜுவல் | | 36 |
| 859 | க்ரோம் கேஸ் 15 ஜுவல் | | 40 |
| 860 | ரோல்டு கோல்டு கேஸ் 15 ஜுவல் | | 50 |
| 861 | 20 மைக்ரான் ரோல்டு கோல்டு 15 ஜுவல் | | 53 |
| 809 | க்ரோம்கேஸ் 7 ஜுவல் | ரூ. | 36 |
| 810 | ரோல்டு கோல்டு கேஸ் 7 ஜுவல் | | 41 |
| 862 | க்ரோம் கேஸ் 15 ஜுவல் | | 45 |
| 863 | ரோல்டு கோல்டு கேஸ் 15 ஜுவல் | | 55 |
| 888 | வாட்டர் ப்ரூப், ஷாக் ப்ரூப் ஸ்டீல் பாக், 15 ஜுவல் | | 65 |





| | | | |
|---|---|---|---|
| 821 | க்ரோம் கேஸ் ஜுவல் | ரூ. | 36 |
| 822 | ரோல்டு கோல்டு கேஸ் 5 ஜுவல் | | 41 |
| 833 | க்ரோம் கேஸ் 7 ஜுவல் | | 42 |
| 834 | ரோல்டு கோல்டு கேஸ் 7 ஜுவல் | | 47 |
| 871 | க்ரோம் கேஸ் ஸ்டீல் பாக் 15 ஜுவல் | | 55 |
| 872 | ரோல்டு கோல்டு கேஸ் 15 ஜுவல் | | 65 |
| 824 | க்ரோம் கேஸ் 5 ஜுவல் | ரூ. | 36 |
| 825 | ரோல்டு கோல்டு கேஸ் 5 ஜுவல் | | 41 |
| 830 | க்ரோம் கேஸ் 7 ஜுவல் | | 42 |
| 837 | ரோல்டு கோல்டு கேஸ் 7 ஜுவல் | | 47 |
| 875 | க்ரோம் ஸ்டீல் பாக் 15 ஜுவல் | | 55 |
| 876 | ரோல்டு கோல்டு கேஸ் 15 ஜுவல் | | 65 |





| | | | |
|---|---|---|---|
| 813 | க்ரோம் கேஸ் 5 ஜுவல் | ரூ. | 27 |
| 814 | ரோல்டு கோல்டு கேஸ் 5 ஜுவல் | | 32 |
| 815 | க்ரோம் கேஸ் 7 ஜுவல் | | 32 |
| 816 | ரோல்டு கோல்டு கேஸ் 7 ஜுவல் | | 37 |
| 865 | க்ரோம் கேஸ் ஸ்டீல் பாக் 15 ஜுவல் | | 65 |
| 866 | ரோல்டு கோல்டு கேஸ் 15 ஜுவல் | | 75 |
| 817 | க்ரோம் கேஸ் 5 ஜுவல் | ரூ. | 31 |
| 818 | ரோல்டுகோல்டு கேஸ் 5 ஜுவல் | | 36 |
| 819 | க்ரோம் கேஸ் 7 ஜுவல் | | 35 |
| 820 | ரோல்டு கோல்டு கேஸ் 7 ஜுவல் | | 40 |
| 868 | க்ரோம் கேஸ் ஸ்டீல் பாக் 15 ஜுவல் | | 70 |
| 869 | ரோல்டு கோல்டு கேஸ் 15 ஜுவல் | | 80 |

**CAROLINE AGENCIES (India). Dept. 17, P.B. 6764, Bombay 22**

இப்பொழுது நடைபெறுகிறது

# ஜூபிடரின்
# கிருஷ்ண விஜயம்

சென்னை
**கெயிட்டி & கிரௌன்**

தினசரி 3 காட்சிகள்

மற்றும் ராஜதானி பூரா
வும் நடைபெறுகிறது



டைரக்ஷன்
**சுந்தர் ராவ் நட்கர்னி**
ஸ்டூடியோ சென்ட்ரல்.

தமிழ் நாட்டு மக்களின் உள்ளத்தில்
மகிழ்வுடன் உலாவி வருகிறார்கள்.



மாடர்ன்
தியேட்டர்ஸ்

# பொன்முடி

இப்பொழுது தென்னாடெங்கும்
வெற்றிகரமாக நடைபெறுகிறது




# லிப்டன்ஸ்

## என்றால்

# சிறந்த டீ




# எண்ணெய் ஸ்நானத்தின் மிக மேலான முறை

உங்கள் சர்மத்தின் மிகவும் அடியில் இருக்கும் பாகங்கள் எண்ணெய் ஸ்நானத்தால் சுத்தம் செய்யப்பட்டு மிருதுவாக்கப்படுகின்றன. ஒரு வகையாகத் தயாரிக்கப்பட்ட சோப்பு அதைப் போல் நன்றாக உபயோகப்படுகிறது. ஏனென்றால் அதில் வழக்கமாக சோப்பிலிருக்கும் நிரப்பும் பதார்த்தங்கள் இல்லை. கேரளா சோப்பைப் பளுவாக்குவதற்கென்று அன்னிய பதார்த்தங்கள் எதுவும் சேர்க்கப்படுவதில்லை. அது சுத்தமானது. அதனால் தான் அது நன்றாக நுரை உண்டு பண்ணுகிறது. மேலும் குளிர்ந்த ஜலத்திலுங்கூட நன்றாக சுத்தம் செய்கிறது.




**வில்லிங்டன்**

கவர்மெண்டு ஹவுஸில் ஒரு பெரிய சீமாட்டிக்கும் அவள் விருந்தாளிகளுக்கும் செய்யப்பட்டது.

**கேரளா ஸோப் இன்ஸ்டிட்யூட், கள்ளிக்கோட்டை.**

டிபார்ட்மெண்ட் ஆப் இண்டஸ்ட்ரீஸ் அண்டு காமெர்ஸ்

**கவர்மெண்ட் ஆப் மெட்ராஸ்**

GSTA'S-RS 7 B- TAMI